1229

உ

கணபதிதுணை.

மழவை — மகாலிங்கஐயரால்

இயற்றப்பட்ட

# இலக்கணச் சுருக்கம்.

வேலாயுத நாடாரவர்களால்

திருப்பற்றூர்:

சின்னையநாடார் பிரெஸில்

அச்சிடப்பட்டது.

---

1888ளு

IMS00571

1229
M



கடவுள் துணை.

# இலக்கணச்சுருக்கம்.

## எழுத்தியல்.

1. மொழிக்கு முதற்காரணமாகிய ஒலியே எழுத்தாகும்.

2. எழுத்து—உயிர், மெய், உயிர்மெய், ஆய்தமென நான்குவகைப்படும்.

3. உயிர் பன்னிரண்டு, மெய் பதினெட்டு, ஆய்தம் ஒன்று, உயிர்மெய் இருநூற்றுப்பதினாறு ஆம்.

4. உயிரும் மெய்யும் முதலெழுத்தென்றும், உயிர்மெய்யும் ஆய்தமும் சார்பெழுத்தென்றும் சொல்லப்படும்.

5. உயிரெழுத்து—குறில், நெடிலென இருவகை.

6. அ, இ, உ, எ, ஒ இவ்வைந்துங் குறில் ஆம்.

7. ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ இவ்வேழும் நெடில் ஆம்.

8. மெய் யெழுத்து—வல்லினம், மெல்லினம், இடையினம் என மூன்றுவகை.

9. க, ச, ட, த, ப, ற, இவ்வாறும் வல்லினம் ஆம்.

10. ஞ, ங, ண, ந, ம, ன இவ்வாறும் மெல்லினம் ஆம்.

11. ய, ர, ல, வ, ழ, ள இவ்வாறும் இடையினம் ஆம்.

12. அ, இ, உ, இம்மூன்றும் சொல்லுக்குமுதலில் அகத்துறுப்பாகவேனும்,புறத்துறுப்பாகவேனும் நின்று சுட்டுப்பொருளைத் தருமாயின் சுட்டெனப்படும்.

(உ-ம்.) அவன், இவன், உவன்—அகச்சுட்டு;
அக்கொற்றன், இப்பலகை, உவ்வீடு,—புறச்சுட்டு.

13. ஆ, ஓ, சொல்லுக்கிற்றில் புறத்துறுப்பாகவும், ஏ-முதலில் அகத்துறுப்பாகவும், ஈற்றில் புறத்துறுப்பாகவும், எ-முதலில் அகத்துறுப்பாகவும், புறத்துறுப்பாகவும் நின்று வினாப்பொருளைத் தருமாயின் வினா எனப்படும்.

(உ-ம்) தச்சனா, தச்சனோ, ஏவன், பொன்னனே, எவன், எங்ஙனம்.

14. யா-என்னும் உயிர்மெய், சொல்லுக்கு முதலில் அகத்துறுப்பாகவேனும் புறத்துறுப்பாகவேனும் நின்று வினாப்பொருளைத் தந்தால் வினா எனப்படும்.

(உ-ம்.) யாவன்-யாங்ஙனம்.

15. அகரத்துக்கு ஆகாரமும், இகரத்துக்கு ஈகாரமும், உகரத்துக்கு ஊகாரமும், எகரத்துக்கு ஏகாரமும், ஐகாரத்துக்கு இகரமும், ஒகரத்துக்கு ஓகாரமும்

ஔகாரத்துக்கு உகரமும், ககரத்துக்கு ஙகரமும், சகரத்துக்கு ஞகரமும், டகரத்துக்கு ணகரமும், தகரத்துக்கு நகரமும், பகரத்துக்கு மகரமும், றகரத்துக்கு னகரமும், இன வெழுத்தென்று சொல்லப்படும். இடையினம் ஆறும் ஓரினம் எனப்படும்.

16. உயிர் மெய் யெழுத்தாவது, உயிரும் மெய்யும் கூடிப்பிறக்கும் எழுத்தாம்.

(உ-ம்.) க, கா, கி, கீ, முதலியன.

17. ஆய்தம்—குற்றெழுத்துக்குப் பின்னும் உயிரெழுத்தோடு சேர்ந்த வல்லெழுத்துக்கு மேலும்வரும்.

(உ-ம்.) எஃகு, கஃசு, இருபஃது.

18. உகரம் மாத்திரையின் சுருக்கத்தாலும்,இயல்பாலும், குற்றியலுகரம், முற்றியலுகரம் என இருவ வகைப்படும்.

19. ஒரு குறிலினாலும் இரண்டு குறிலினாலும் ஆக்கப்படாத மொழியீற்று வல்லின மெய்யின்மேல் ஏறிய உகரம் குற்றிய லுகரம் என்னப்படும்.

அது ஈற்றெழுத்துக்கு அயலெழுத்தை நோக்கி நெடிற்றொடர், உயிர்த் தொடர், வன் றொடர், மென்றொடர், இடைத்தொடர், ஆய்தத் தொடர், என அறு வகையாம்.

(உ-ம்.) நெடிற்றொடர்—நாடு; உயிர்த்தொடர்—வரகு; வன் றொடர்—சுக்கு; மென் றொடர்

—௭௩. இடைத் தொடர்—சால்பு; ஆய்தத் தொடர்—கஃசு.

20. தனித்தும் தனிக்குறிலைச் சேர்ந்தும் வரும் வல்லின மெய்யின்மேலும் மெல்லின இடையின மெய்களின் மேலும் வரும் உகரம் முற்றிய லுகரமாம்.

(உ-ம்.) கு, நு, நடு. பசு, தாணு, கதவு.

21. கண்ணிமைப் பொழுதும் கைந்நொடிப் பொழுதும்மாத்திரைக்களவாம்.

நெட்டெழுத்துக்கு மாத்திரை இரண்டு; குற்றெழுத்துக்கு மாத்திரை ஒன்று; மெய்யெழுத்துக்கும், குற்றியலுகரத்துக்கும், ஆய்தத்துக்கும் தனித்தனிமாத்திரை அரையாம்.

உயிர் மெய்க்கு மெய்ம்மாத்திரை ஒழிய ஏறிய உயிர் மாத்திரையே மாத்திரையாம்.

22. பண்டமாற்றிலும் விளியிலும் இசையிலும் புலம்பலிலும் உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் தமக்குச் சொன்ன அளவைக் கடந்து நீண்டொலிக்கும்.

23. உயிரெழுத்துப் பன்னிரண்டும் க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ என்னும் ஒன்பதுயிர் மெய்யெழுத்தும் மொழிக்கு முதலில்வரும்.

(உ-ம்) அடை, ஆடை, இடை, ஈடு, உடை, ஊடல், எடு, ஏடு, ஐயம், ஒதி, ஓதி, ஔவியம்.

24. ஒன்பது மெய்களில் க, ச, த, ந, ப, ம, இவ்வாறு மெய்யும் பன்னிரண்டு யிரோடுங்கூடி மொழிக்கு முதலாகும்.

(உ-ம்) கடு, கால், கிள்ளை, சீழ்மை, குடில், கூந்தல் கெண்டை, கேழல், கைதவம், கொற்றவன், கோட்டம், கௌவை.

சம்பு, சார்பு, சிறுவன், சீயம், சுகம், சூடகம், செப்பம், சேதகம், சைவலம், சொல், சோம்பல், சௌரியம்.

தங்கை, தாளாண்மை, திசை, தீங்கு, துடி, தூய்மை, தெற்றி, தேட்டம், தையல், தொண்டை, தோயம், தௌவை.

நன்மை, நாடு, நிரை, நீட்சி, நுரை, நூல், நெல், நேர்மை, நைதல், நொடி, நோன்பு, நௌவி.

பதி, பாயல், பிதிர், பீழை, புகழ், பூண், பெண், பேதைமை, பையல், பொறுமை, போது, பௌவம்.

மதி, மாளிகை, மின், மீளி, முன், மூங்கில், மெல்லியல், மேடை, மையல், மொழி, மோத்தை, மௌவல், எனவரும்.

25. வகரம் அ, ஆ, இ, ஈ, எ, ஏ, ஐ, ஔ என்கிற எட்டுயிரெழுத்தோடு மொழிக்கு முதலில்வரும்.

(உ-ம்) வலி, வாழை, விளி, வீடு, வெளி, வேலை, வையம், வௌவால்.

26. யகரம் அ, ஆ, உ, ஊ, ஓ, ஔ என்கிற ஆறுயிரெழுத்தோடு மொழிக்கு முதலில் வரும்.

(உ-ம்) யவனர், யானை, யுகம், யூகம், யோகம், யௌவனம்.

27. ஞகரம் அ, ஆ, இ, எ, ஒ என்கிற ஐந்துயிரெழுத்தோடு மொழிக்கு முதலில் வரும்.

(உ-ம்) ஞமலி, ஞாலம், ஞிமிறு, ஞெண்டு, ஞொள்கிற்று.

28. அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ ஆகிய பதினோருயிரும், ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள, என்கிற பதினொருமெய்யுமாகிய இருபத்திரண்டெழுத்தும் மொழிக்கு இறுதியில் வரும்.

(உ-ம்.) பல, பலா, இடி, தீ, பந்து, பூ, சே, மனை, நொ, போ, கௌ, உரிஞ், மண், வெந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், காழ், புள், எனவரும்.

29. இரண்டு குறிலை அடுத்த அஃறிணைப்பெயரினிறுதியி லிருக்கிற மகரத்துக்கு னகரம் வந்தால் போலியென்று சொல்லப்படும்.

(உ-ம்.) பலம், பலன், முகம், முகன்.

30. அகரத்திற்குமுன் இகரமும், யகரமும், தனித் தனி வந்தால் ஐகாரத்தை ஒத்தொலிக்கும்.

(உ-ம்.) வைத்தியன், வயித்தியன்; வையம், வய்யம்.

31. அகரத்துக்கு முன் உகரமும் வகரமும் வந்தால் ஒளகாரத்தை ஒத்து ஒலிக்கும்.

(உ-ம்.) பௌத்தர், பவுத்தர், ஒளவை, அவ்வை.

32. சிலசொற்களின் முதலில் நகரத்துக்கு ஞகரம் போலியாகவரும்.

(உ-ம்.) நாயிறு, ஞாயிறு; நயம், ஞயம்.

33. சிலசொற்களின்இடையில்உள்ள தகரத்துக்குச் சகரம் போலியாக வரும்.

(உ-ம்.) பித்து, பிச்சு; வைத்த பொருள், வைச்ச பொருள்.

34. சில சொற்களின் இடையில் நகர தகரங்களுக்கு ஞகர சகரங்கள் முறையே போலியாகும்போது அச்சொற்களின் முதலில் ஐகாரம் இருக்கின் அதற்கு அகரம்போலியாகவரும்.

(உ-ம்.) உய்த்தனன், உச்சனன், நீந்தினன், நீஞ்சினன்; ஐந்து, அஞ்சு: மைந்தன், மஞ்சன்.

35. தொடர்மொழி ஐகாரத்தின் கீழ் நின்ற நகரத்துக்கும் ஞகரம் போலியாம்.

(உ-ம்.) ஐந்நூறு, ஐஞ்ஞூறு.

36. சில சொற்களின் ஈற்றுலகரத்துக்கு ரகாமும், சில குற்றிய லுகரங்களுக்கு அர் என்பதும் போலியாம்.

(உ-ம்.) பந்தல், பந்தர்; சுரும்பு, சுரும்பர்.

37. மெய்யெழுத்துகள் அகரச்சாரியையும், உயிர் நெட்டெழுத்துகள் காரச்சாரியையும், உயிர்க்குற்றெழுத்தும், உயிர்மெய்க் குற்றெழுத்தும், கரம் காரம் என்கிற இரண்டு சாரியையும் பெறும்.

(உ-ம்.) க ங எனவும், ஆகாரமெனவும், ஐகாரமெனவும், அகரம், மகரம், அகாரம். மகாரமெனவும் வரும்.

மெய் சாரியை பெறுமலும், உயிர் மெய்ந்நெடில் சாரியைபெற்றும் வருவனவல்ல.

எழுத்தியல் முற்றிற்று.

---

## பதவியல்.

38. எழுத்துகள் தனித்தாவது, இரண்டு முதலாகத் தொடர்ந்தாவது, ஒருபொருளைத் தெரிவித்தால் பதமாம். அது பகாப்பதமென்றும், பகுபதமென்றும் இருவகையாம்.

39. பகாப்பதமாவது, சொல்லைப்பகுத்தலால் பகுதி விகுதி முதலாகிய பிரயோசனமில்லாமல் ஒரு பொருளைக் காட்டுதற்கு ஏற்படுத்திய சொல்லாகும்.

(உ-ம்.) பெயர்ப்பகாப்பதம்—சா. மண்.

வினை ,, வா, உண்.

இடை ,, ஏ, மற்று.

உரி ,, மா, நனி.

40. பகுபதமாவது, சொல்லைப் பகுக்கும்போது பகுதிக்கும், விகுதிக்கும், வேறு பொருளுண்டாகி ஒருபொருளைத் தெரிவிப்பதாம்.

41. பகுபதம் பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம், இவ்வாறுறுப்புப் பெற்றும், பகுதி விகுதிகள் அல்லாத மற்றைய வுறுப்புகளில் சில பெறுதும் வரும்.

பெயர்ப்பகுபதம்.

(உ-ம்.) கூனி—கூன் + இ எனப்பகுதி விகுதியால் முடிந்தது.

அறிஞன்—அறி + ஞ் + அன் எனப்பகுதி, விகுதி, இடைநிலையால் முடிந்தது.

குழையான்—குழை + ய் + ஆன் எனப்பகுதி, விகுதி சந்தியால் முடிந்தது.

குழையினன்—குழை + ய் + இன் + அன் எனப்பகுதி விகுதி, சாரியை, சந்தியால் முடிந்தது.

வினைப் பகுபதம்.

(உ-ம்.) கேளாய்—கேள் + ஆய், எனப்பகுதி, விகுதியால் முடிந்தது.

உண்டான்—உண்+ட்+ஆன், எனப்பகுதி, விகுதி, இடைநிலையால் முடிந்தது.

உண்டனன்—உண்+ட்+அன்+அன், எனப்பகுதி, விகுதி, இடைநிலை சாரியையால் முடிந்தது.

பிடித்தனன்—பிடி+த்+த்+அன்+அன், எனப்பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை; சந்தியால் முடிந்தது.

நடந்தனன்—நட+த்+த்+அன்+அன், என ஐந்தும் பெற்றுச் சந்தியால் வந்ததகரவொற்றுநகரவொற்றாகத் திரியும் விகாரத்தையும் பெற்று ஆறுறுப்பால் முடிந்தது.

42. நட, வா, மடி, சீ, விடு, கூ, வே, வை, நொ, போ, வெள, உரிஞ், உண், தின், தேய், பார், செல், வாழ், சேள், இப்பத்தொன்பது ஈற்றினை யுடையனவுந் தெரிநிலை வினைப்பகுதிகளாம்.

43. மேற்சொன்ன பகுதிகளின்மேல் வி, பி, து, சு, என்கிற நான்கு விகுதிகளும் வந்தால் பிறவினைப்பகுதிகளாம்.

(உ-ம்.) கொல்வி, நடப்பி, நடத்து, பாய்ச்சு, எனவரும்

44. சில பகுதிகளின் இடையிலிருக்கும் மெல்லொற்று வல்லொற்றாகத் திரிதலாலும், நடுவில் ஓரொற்றுத் தோன்றுதலாலும் பிறவினையாவதும் உண்டு.

(உ-ம்.) எழும்பு, எழுப்பு; உருகு, உருக்கு; எனவரும்.

45. அன், ஆன், அள், ஆள், அர், ஆர், மார், அ, ஆ, ஐ, ஏன், அல், அம், ஆம், ஏம், ஓம், க, இய, உம், இ, உ, தல், சை, பு, வி, உள், இ, சி, ஆய், இர், ஈர், மான், கள், தை, பி, ய், ள், ன், ஆல், மல், மே, கால், றி, று, வை, பாடு, கு, மை, காடு, இந்நாற்பத்தொன்பதும் விகுதிகளாம்.

46. அன், ஆன், அள், ஆள், அர், ஆர், து, அ, ஆ, ஐ, ஆய், இர், ஈர், ஏன், அம், ஆம், ஏம், ஓம், உம், க, இவ்விருபதும் வினைமுற்றுவிகுதிகளாம்.

(உ-ம்.) நடந்தனன், நடந்தான், நடந்தனள், நடந்தாள், நடந்தனர், நடந்தார், நடந்தது, நடந்தன, நடவா, நடந்தனை, நடந்தாய், நடந்தனிர், நடந்தீர், நடந்தேன், நடந்தனம், நடந்தாம், நடந்தேம், நடந்தோம், நடவும், நடக்க, எனவரும்.

47. அன், ஆன், அள், ஆள், அர், ஆர், அ, து, இ, மார், மன், மான், கள், வை, கை, பி, ன், ள், ர், இப்பத்தொன்பதும் பெயர்விகுதிகளாம்.

(உ-ம்.) குழையன், வானத்தான், குழையள், வானத்தாள், குழையர், வானத்தார், குழையன், யாது, பொன்னி, தேவிமார், வடமன், சோமான், கோக்கள், அவை, தங்கை, தம்பி, பிறன், மகள், பிறர், எனவரும்.

48. அ, உம், இவ்விரண்டும், பெயரெச்ச விகுதிகளாம்.

(உ-ம்.) வந்த, நடக்கும்.

49. உ, இ, ய், அ, கு, ன், ஆல், கால், மல், மே, து, றி, இப்பன்னிரண்டும் வினையெச்ச விகுதிகளாம்.

(உ-ம்.) நடந்து, ஓடி, போய், நடக்க, உண்ணற்கு, நடக்கின், நடந்தால், நடந்தக்கால், உண்ணாமல், உண்ணாமே, அல்லது, அன்றி, எனவரும்.

50. தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, உ, தி, சி, வி, உள், காடு, பாடு, மை, து, இவை பதினேழும் தொழிற்பெயர் விகுதிகளாம்.

(உ-ம்.) நடத்தல், ஆடல், வாட்டம், கொலை, வருகை, பார்வை, போக்கு, நடப்பு, வரவு, மறதி, உணர்ச்சி, கல்வி, விக்குள், சாக்காடு, கோட்பாடு, நடவாமை, வருவது, எனவரும்.

51. மை, ஐ, பு, கு, றி, று, அம், பம், னர், இவை ஒன்பதும் பண்புப்பெயர் விகுதிகளாம்.

(உ-ம்.) நன்மை, தொல்லை, நண்பு, நன்கு, நன்றி, நன்று, நலம், ஒட்பம், நன்னர் எனவரும்.

52. இ, ஐ, அம், இம் மூன்றும் அலரி, பறவை, எச்சம் என வினைமுதற்பொருளையும், ஊருணி, தொடை, தொல்காப்பியம் எனச் செயப்படுபொருளையும், மண்

வெட்டி, பார்வை, நோக்கம் எனக்கருவிப்பொருளையு ம்உணர்த்தும்.

53. கொள், தற்செயலில் வரும் விகுதியாம்.

(உ-ம்.) அடித்துக்கொள்.

54. உம், பிற்பொருட்டில் வரும்.

(உ-ம்.) வந்ததும்போனான்.

55. பெயர்பகுபதம் பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்கிறஆறினையும், அடியாகக் கொண்டு பிறக்கும்.

(உ-ம்.) பொன்னன், பட்டணத்தான், தாரணவருடத்தான், கண்ணன், கரியன் தட்டான்.

56. வினைப்பகுபதம் தெரிநிலை, குறிப்பு, எனஇரண்டுவகைப்படும்,

(உ-ம்.) நடந்தான், பொன்னனிவன்.

57. தெரிநிலை வினையாலணையும் பெயரும் பகுபதமாம்.

(உ-ம்.) வந்தவன், படுவான்.

58. பெயர்ப்பகுபதத்தைப் பகுதி விகுதியாகப்பிரிக்கும்போது நடுவில்யாதேனும் ஒரெழுத்திருந்தால்அது பெயர்ப்பகுபத இடை நிலையென்று சொல்லப்படும்.

(உ-ம்.) வலைச்சி, வலைஞன், இவைகளில், சகரமும், ஞகரமும், இடைநிலையாகவந்தன.

59. வினைப்பகுபத இடைநிலைகள் ஒன்பதாம்.

அவற்றுள்த், ட், ற், இன், இந்த நான்கும் இறந்தகாலத்தைக்காட்டும் இடைநிலைகளாம்.

(உ-ம்.) அறுத்தான், உண்டான், சென்றான், போயினான்.

ஆநின்று, கின்று, கிறு, இம்மூன்றும் நிகழ் காலத்தைக் காட்டும் இடைநிலைகளாம்.

(உ-ம்.) உண்ணாநின்றான், உண்கின்றான், உண்கிறான், எனவரும்.

ப், வ், இவ்விரண்டும் எதிர்காலத்தைக் காட்டும் இடைநிலைகளாம்.

(உ-ம்.) நடப்பான், வருவான், எனவரும்.

60. மேற்சொல்லிய வினைப்பகுபத இடைநிலைகளைச் செய்யு மென்னும் வினைமுற்று, வியங்கோள் வினைமுற்று, ஏவல் வினைமுற்று, செய்தென்னும் வினையெச்சம், செய, செயின் என்னும் வினையெச்சங்கள், பெறாவாம்.

(உ-ம்.) அது நடக்கும், நீர் வருக, உண்ணாய், வருங்குதிரை, ஓடி, போய், நடக்க, நடக்கின், எனவரும்.

## வடமொழி.

61. ஜகரம் மொழிக்கு முதலில், சகரமாகவும், நடுவில், சகரமாகவும் யகரமாகவும் திரியும்.

(உ-ம்.) சலம், விசயம், புயம்.

62. ஷகரம் மொழிக்கு முதலில் சகரமாகவும், இடையில் டகரமாகவும் திரியும்,

(உ-ம்.) சட்டி, விடயம்.

63. க்ஷகரம், இரண்டு ககரமாகவும், டகர சகரங்களாகவும், இரண்டு சகரமாகவும் திரியும்,

(உ-ம்.) சாக்கி, சாட்சி, பிச்சை.

64. ஸகரம் தகரமாகத்திரியும்.

(உ-ம்.) மாதம்.

65. ஹ மொழிக்கு முதலில் அகரமாகவும்; நடுவில் ககரமாகவும் திரியும்.

(உ-ம்) அரன், மோகம்.

65. (a) ஆகாரம் ஐகரமாகத்திரிந்தும் சிறுபான்மை திரியாதும் வரும்.

(உ-ம்.)மாலை, தயா.

66. தமிழில் வசனமாக ஒருநூல் செய்யும்போது மாலை, தச்சன், தவிர மற்றசொற்களைத் திரிக்காமல் வடவெழுத்தையே எழுதிக்கொள்ள விருப்பமிருந்தால் செய்யலாம்.

(உ-ம்.)மாஸம், மோஹம்,பிக்ஷை.

## புணரியல்.

---

67. புணர்ச்சியாவது நிலைமொழியீறும் வருமொழிமுதலும் ஒன்றுபட்டிணங்குவதாம்.

68. புணர்ச்சி வேற்றுமைப் புணர்ச்சியென்றும், அல்வழிப் புணர்ச்சியென்றும்,இருவகைப்படும்.

69. வேற்றுமைப்புணர்ச்சி ஐ. ஆல், கு, இன், அது, இல் என்னும் ஆறுருபுகளும் மொழிக்கு நடுவில் மறைந்தும் வெளிப்பட்டும் நிற்கப் பதங்கள்பொருந்தும் புணர்ச்சியாம்.

(உ-ம்.)

நீர்குடித்தான் ... உ-ம் வேற்றுமைத்தொகை,
நீரைக்குடித்தான் ... ... உ-ம் வேற்றுமைவிரி.
கல்லெறிந்தான் ... ௩-ம் வேற்றுமைத்தொகை.
கல்லாலெறிந்தான் ... ... ௩-ம்வேற்றுமை விரி.
கூலிவேலை ... ... ச-ம் வேற்றுமைத்தொகை.
கூலிக்குவேலை... ... ... ச-ம்வேற்றுமைவிரி.
மலைவிழருவி ... ... ரு-ம் வேற்றுமைத்தொகை.
மலையின்விழருவி ... ... ரு-ம்வேற்றுமைவிரி.
சாத்தன்கை ... ... சு-ம் வேற்றுமைத்தொகை.
சாத்தனதுகை... ... ...சு-ம் வேற்றுமைவிரி.
காட்டுப்புலி... ... எ-ம் வேற்றுமைத்தொகை.
காட்டில்புலி...... ... ... எ-ம் வேற்றுமைவிரி.

70. அல்வழிப்புணர்ச்சியாவது வேற்றுமை உருப்புகள் இடையில் வராமல் நிலைமொழியும் வருமொழியும் ஒன்றுபடப் புணர்வது. அது பதினொன்கு வகைப்படும்.

(உ-ம்)

கொல்யானை... ... ... ...வினைத்தொகை.
கருங்குதிரை ... ... ... ... பண்புத்தொகை.
சாரைப்பாம்பு இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
மதிமுகம்... ... ... ...உவமைத்தொகை.
இராப்பகல் ... ... ...உம்மைத்தொகை.
தேன்மொழிவந்தாள்... ... அன்மொழித்தொகை.
சாத்தன்வந்தான்... ... எழுவாய்த்தொடர்.
சாத்தாவா... ... ... ... ...விளித்தொடர்.
வந்தகுதிரை... ...தெரிநிலைப்பெயரெச்சத்தொடர்.
பெரியசாத்தன்... ...குறிப்புப்பெயரெச்சத்தொடர்.
வந்துபோனான்... ...தெரிநிலைவினையெச்சத்தொடர்.
விருந்தின்றியுண்டான். குறிப்புவினையெச்சத்தொடர்.
வந்தான்சாத்தன்.... தெரிநிலைவினைமுற்றுத்தொடர்.
பொன்னனிவன்... ...குறிப்புவினைமுற்றுத்தொடர்.
மற்றொன்று... ... ...இடைச்சொற்றொடர்.
நனிபேதை... ... ... உரிச்சொற்றொடர்.
பாம்புபாம்பு... ... ... ...அடுக்குத்தொடர்.

71. பதங்கள் ஒன்றேடொன்று புணரும்போது இடையில் எழுத்தாவது சாரியையாவது தோன்றுதலும், நிலைமொழி யீற்றெழுத்தாவது வருமொழிமுதலெழுத்தாவது திரிதலும், கெடுதலும் அடைந்த புணர்ச்சி விகாரப்புணர்ச்சி எனப்படும்.

(உ-ம்) மா + காய் = மாங்காய் } ...தோன்றல்விகாரம்.
ஆல் + காய் = ஆலங்காய் }
என் + நெய் = எண்ணெய்... ...திரிதல்விகாரம்.
மரம் + வேர் = மரவேர்... ... கெடுதல்விகாரம்.

72. நிலைமொழியும் வருமொழியும் விகாரப்படாமல் புணர்வது இயல்புப் புணர்ச்சியாம்.

(உ-ம்.) பொன்மணி; அலைபெரிது.

73. இ, ஈ, ஐ, இம்மூன்று உயிருக்குமுன் உயிர்வந்தால் யகரம் உடம்படுமெய்யாகவரும்.

(உ-ம்.) மணி + அழகு = மணியழகு, தீயழகு, மலையழகு, எனவரும்.

74. அ, ஆ, உ, ஊ, ஓ, ஔ, இவ்வாறுயிர்க்குமுன் உயிர்வந்தால் இடையில் வகரம் உடம்படு மெய்யாக வரும்.

(உ-ம்.) பல + அழகு = பலவழகு, பலாவழகு; மதுவழகு, பூவழகு, கோவழகு, கௌவழகு, எனவரும்.

75. ஓரெழுத் தொருமொழியாகிய ஏ, சே, தே, என்னும் பெயர்ச்சொல் ஏகாரத்துச்கு முன் உயிர் வந்தால் ககரமும், பண்புச் சொல்லின் விகாரமாகிய சே என்பதற்குமுன் உயிர்வந்தால் யகரமும் வகரமும் தோன்றும்.

(உ-ம்.) ஏ+அழகு=ஏவழகு, சேவழகு, தேவழகு, சேயடி, சேவடி, எனவரும்.

76. இடைச்சொல் ஏகாரத்துக்குமுன் உயிர்வரின் யகரமே உடம்படுமெய்யாகும்.

(உ-ம்.) அவனே யடித்தான்.

77. மெய் யெழுத்துக்குமுன் உயிர்வந்தால் அவ்வுயிர் மெய்யெழுத்தோடு கூடும்.

(உ-ம்.) வேல்+அழகு=வேலழகு.

78. தனிக் குற்றெழுத்தைச் சேர்ந்த மெய்யின் முன் உயிர்வந்தால் அந்தமெய் இரட்டும்.

(உ-ம்.) கல்+எறிந்தான்=கல்லெறிந்தான்.

79. எகரவினு முன்னும் சுட்டு முன்னும் உயிரும் யகரமும் வந்தால் வகரமும், மற்றை மூன்றினமும் வந்தால் அந்த அந்த எழுத்தும் தோன்றும்.

(உ-ம்.) எ+உயிர்=எவ்வுயிர்; எவ்யானை, அவ் வுயிர் அவ்யானை, எக்காலம், எந்நாள், எவ்வலி, அக்காலம் அந்நாள், அவ்வலி; எனவரும்.

80. குற்றியலுகரத்தின் முன் உயிர்வந்தால் உகரங்கெட்டு அது ஏறிய மெய்யில்வந்த உயிரேறும்.

(உ-ம்.) நாடு + ஆண்டான் = நாடாண்டான்.

81. குற்றிய லுகரம் வடமொழியா யிருந்தால் கெடாது.

(உ-ம்.) சம்பு + ஐ = சம்புவை; விண்டுவை; இந்துவைஎனவரும்.

82. தனிக்குற்றெழுத்தைச் சேர்ந்த கு, சு, டு, து, பு, றுக்களாகிய, முற்றியலுகரத்துக்கு முன்உயிர்வந்தால்அவ்வுகரங்கெடாமல் உடம்படுமெய்தோன்றும்.

(உ-ம்.) பசு + அழகு = பசுவழகு; மடுவழகு; அதுவழகு, எனவரும்.

83. டகர றகர விறுகளையுடைய உயிர்த்தொடர்க் குற்றிய லுகரத்திற்கு முன்னும், நெடிற்றொடர்க் குற்றிய லுகரத்திற்கு முன்னும், வேற்றுமையில் நாற்கணமும் வந்தால் உகரமேறிய மெய் இரட்டும்.

(உ-ம்.) காடு + இடம் = காட்டிடம்; குதிரை, மரம்; வாழ்க்கை, எ-ம்; மிடற்றொலி, முறட்டுக்கோல், கிணற்றுநீர், வயிற்றுவலி, எ-ம்; வரும்.

84. இக்குற்றிய லுகரங்கள்பண்புத்தொகையிலும் இரட்டும்.

(உ-ம்.) முடு + பூச்சி = முட்டுப்பூச்சி; வறட்டாடு முயிற்றெறும்பு.

85. எருது என்னும் உயிர்த்தொடரும் இரட்டும்.
(உ-ம்.) எருது + மாடு = எருத்துமாடு.

86. மேற்சொல்லிய இருதொடரும் இரண்டாம் வேற்றுமைத் தொகையிலும் ஏழாம்வேற்றுமைத்தொகையிலும் இரட்டாவாம்.

(உ-ம்.) நாடாண்டான், காடுசென்ருன்.

87. ஆரும் வேற்றுமைத் தொகையிலும் விரியிலும் இரட்டும்.

(உ-ம்.) ஆடு + கால் = ஆட்டுக்கால், ஆட்டினதுகால், எனவரும்.

88. தனி நெடில்மொழி முன்னும் குறில் நெடிலிணைந்த மொழிமுன்னும் இருவழியும் வல்லினமிகும்.
(உ-ம்.) பூ + பூத்தது = பூப்பூத்தது; பூப்பறித்தான் சுருப்பாய்ந்தது; சுருப்பிடித்தான் எனவரும்.

89. உயிரையும் மெய்யையும் இறுதியாகவுடைய உயர்திணைப் பெயர் பொதுப் பெயர் வினைவைஅடுத்தபெயர், விளிப்பெயர், எழுவாய்த் தொடர், இவ்வைந்தின் முன்னும் வல்லெழுத்து மிகாது.

(உ-ம்.) தம்பிகை, தந்தைகை, நீகுறியை, நீர்குறியீர், அவனுகொண்டான், சாத்தாகொடு, நம்பிதந்தான், எனக்காண்க,

90. பலவகையாகிய வினை முற்றின் முன்னும் பெயரொச்சத்தின் முன்னும், வினைத்தொகை, முன்னும் ஒற்று மிகாது.

(உ-ம்.)

உண்டோத்தா... ... ...முன்னிலையேவல்வினைமுற்று.
உண்டதகுதிரை } அஃறிணைப் படர்க்கை வினைமுற்று.
உண்டனகுதிரைகள் }
வாழ்கொற்றா... ... வியங்கோள்வினைமுற்று.
உண்டனைகொற்றா }
உண்டாய்கொற்றா } முன்னிலை வினைமுற்று.
உண்டீர்கொற்றரே }
உண்ணுகொற்றா } ஏவல்வினைமுற்று.
உண்ணீர்கொற்றரே }
குளிர்காற்று ... ... ...வினைத்தொகை

91. உயிரீற்றுச் சுட்டுபெயர் முன்னும் வினாப்பெயர் முன்னும் வலிமிகாது:

(உ-ம்.) அதுகுறிது, அவைகுறிய, எதுகுறிது, எவைகுறிய, எனவரும்.

92. சுட்டுத்திரிபின் முன்னும் வினாத்திரிபின் முன்னும் வலி மிகும்.

(உ-ம்.) அந்த + குதிரை = அந்தக் குதிரை; எந்தப் பையன்.

93. உகரவீற்று விகார வெண்ணுப் பெயர் முன் வலிமிகாது.

(உ-ம்) ஒருசாண், இருகை, அறுகை, எழுகடல்.

94. உயிரையு மெய்யையும் இறுதியாக உடைய அஃறிணைப்பெயர்முன் வேற்றுமையில் வலிமிகும்.

(உ-ம்) குதிரை + கால் = குதிரைக்கால், கிளிச்சிறகு. நாய்க்கால்; தேர்க்கால்,எனவரும்.

95. பண்புத்தொகை, உயர்திணையிலும்; அஃறிணையிலும் வலிமிகும்.

(உ-ம்.) நம்பி + கொற்றன் = நம்பிக்கொற்றன், சாரைப்பாம்பு

96. சிறு என்னும் பண்புமாத்திரம்மிகாது.

(உ-ம்.) சிறு + துரும்பு = சிறுதுரும்பு.

97. சிறு, வெறு, குறு, நடு, புது, என்னும் பண்படிகளின் முன் உயிர் வந்தால் உகரமேறிய மெய் இரட்டும்.

(உ-ம்) சிறு + அப்பன் = சிற்றப்பன்.
வெறு + இலை = வெற்றிலை.
குறு + உடைவாள் = குற்றுடைவாள்.
நடு + ஆறு = நட்டாறு.
புது + உருக்குநெய் = புத்துருக்குநெய்எனவரும்.

98. சிறு என்பது தவிர, குறு, வெறு, நெடு, பெரு, அரு கரு, என்னும் பண்படிகளின் முன்வல்லினம் வந்தால் இனவெழுத்துத் தோன்றும்.

(உ-ம்.) குறு + கை = குறுங்கை; வெறும்பொய் நெடுந்தூண்; பெரும்பேச்சு; அரும்பொருள், கருங்குதிரை எனவரும்.

99. பெரு, அரு, கரு, என்பன உயிர்வந்தால் முதல் நீண்டேவரும்.

(உ:ம்.)பெரு + ஆசை = பேராசை; ஆருயிர்; காராடு.

100. பல, சில என்னும் சொற்களின் முன்வலி இயல்பாம்.

(உ-ம்.)பல + பேச்சு, பலபேச்சு, சிலபொருள்.

101. இகர யகர ஈற்றுச் செய்தென்னும் வினையெச்சத்தின் முன்னும், அகரவீற்றுச் செயவென்னும் வினையெச்சத்தின் முன்னும் ஒற்றுமிகும்.

(உ-ம்.) ஆடி + கொண்டான் = ஆடிக்கொண்டான்; போய்க் கண்டான்; பார்க்கப்போனான்.

102. மென்றொடர், இடைத்தொடர், ஒற்றிடையேமிகாத நெடிற்றொடர், உயிர்த்தொடர்க் குற்றியலுகர மொழிகளுக்குமுன் அல்வழியில் வலிமிகாது.

(உ-ம்.) வந்து + போனான் = வந்துபோனான், செய்து தந்தான். ஆறுதூண், வரகுகாய்த்தது.

103. சில மென்றொடர்க் குற்றியலுகரம் வன்றொடர்க் குற்றியலுகரமாதலும் அதனோடு அம்முச்சாரியை பெறுதலும் உண்டு.

(உ-ம்.) இரும்பு + உலக்கை = இருப்புலக்கை,
கரும்பு + சாறு = கருப்பஞ்சாறு.

104. வன்றொடர்முன் இருவழியிலும் வலிமிகும்

(உ-ம்.) அறுத்து + தந்தான் = அறுத்துத்தந்தான்,
கொக்குக்கால்.

105. அன்று, இன்று, என்று, என்னும் மென்றொடரும், நேற்று என்னும் வன்றொடரும், ஐகாரச்சாரியை பெறும்.

(உ-ம்.) அன்று + கு = அன்றைக்கு, இன்றைக்கு,
என்றைக்கு நேற்றைக்கு.

106. படி என்னு மிடைச்சொல் வினையை யடுத்து வரும்போது வலிமிகாமையும், சுட்டுவினாவையடுத்து வரும்போது மிகுதலு மிகாமையும், உண்டாம்.

(உ-ம்.) வரும்படிசொன்னான், அப்படிச்செய்தான்,

107. தனை, அளவு, என்னும் பண்புச்சொல் முன் வலிமிகாது.

(உ-ம்.) அத்தனைபேச்சு, அவ்வளவுபேச்சு.

108. அன்றி, இன்றி, என்னும் எதிர்மறைக் குறிப்பு வினையெச்சம், மெல்ல, பைய, வலிய என்னும் உடன்

பாட்டுக் குறிப்பு வினையெச்சம், இவைகளுக்குமுன் வலிமிகும்.

(உ-ம்.) அன்றி+போனான்=அன்றிப்போனான் இன்றிக்கண்டான், மெல்லப்பேசினான், பையச்சென்றான், வலியச்சொன்னான்.

109. ஈறுகெட்ட பெயரெச்சத்தின் முன் ஒற்று மிகும்.

(உ-ம்.) நடவா+குதிரை=நடவாக்குதிரை, இல்லாப்பொருள்.

110. உயிரீற்றுச் சில மரப்பெயர்முன் வலிவந்தால் இனவெழுத்துத்தோன்றும்.

(உ-ம்.) மா+காய்=மாங்காய்
விளா+காய்=விளாங்காய்.

111. ஐகார ஈற்றுச்சில மரப்பெயர்க்கு ஐகெட்டு அம்முச்சாரியை தோன்றும்.

(உ-ம்.) எலுமிச்சை + காய் = எலுமிச்சங்காய். மாதளை,தாழை,நாரத்தை,அதளை, பாவட்டை, முதலியவற்றிற்கும் இவ்விதியே.

112. இகர உகரங்களையும் லகரத்தையும் ஈற்றினுடைய சொற்களின் முன்னும் அம்முச்சாரியை தோன்றும்.

(உ-ம்.) புளி+காய்=புளியங்காய், புன்கு+காய் =புன்கங்காய், ஆலங்காய் எனவரும்;

113. ஒன்று என்னும் எண்வருமொழியோடு புணரும்போது ஈற்றுயிர்மெய்கெட்டு னகரம் ரகரமாய் அதன்மேல் உகரச்சாரியைவரும்.

(உ-ம்.) ஒன்று+கழஞ்சு=ஒருகழஞ்சு, ஒருநாள்,

114. வருமொழி உயிராயின், முதல்நீண்டு உகரச் சாரியை கெடும்.

(உ-ம்.) ஒரு+ஆயிரம்=ஓராயிரம், ஓரம்பு.

115. இரண்டு-ரகர ஒற்றே நின்று, மற்றைய எழுத்தெல்லாங் கெட உகரச்சாரியை பெறும்.

(உ-ம்.) இரண்டு+கழஞ்சு=இருகழஞ்சு, இருநாள்.

(*a.*) உயிர்வரின், முதல்நீண்டு உகரச்சாரியை கெடும்.

(உ-ம்.) இரண்டு+ஆயிரம்=ஈராயிரம், ஈருயிர்.

116. மூன்று உயிர்வரின் ஈற்றுயிர்மெய்யும்னகரமுங் கெடுதலும், மெய்வரின் முதல்குறுகி ஈறுகெட்டு னகரம் வருகிற மெய்யாகத்திரிதலுமாம்.

(உ-ம்.) மூன்று+ஆயிரம்=மூவாயிரம் எ-ம், முக்கலம், முந்நாழி, முவ்வட்டி எ-ம் வரும்.

117. நான்கு ஈறுகெட்டு னகரம் லகர றகரமாகத் திரியும்.

(உ-ம்.) நான்கு+ஆயிரம்=நாலாயிரம்: நான்கு+பத்து=நாற்பது எனவரும்.

118. ஐந்து ஈறுகெட்டு நகரம்வருகிற மெய்யாதலும், அதற் கினமாதலும்; கெடுதலுமாம்.

(உ-ம்.) ஐந்து + மூன்று = ஐம்மூன்று, ஐங்கலம்; ஐயாயிரம் எனக்காண்க.

119. ஆறு குறுகலும் இயல்பு மாம்.

(உ-ம்.) ஆறு + பத்து = அறுபது, ஆறு + ஆயிரம் = ஆறாயிரம்.

120. ஏழு உயிர்வரின் ஈற்றுகரங்கெடுதலும், மெய்வரின் முதல் குறுகலும், குறுகாமையுமாம்.

(உ-ம்.) ஏழு + ஆயிரம் = ஏழாயிரம்; ஏழு + பத்து = எழுபது; ஏழு + பணம் = ஏழுபணம், எனவரும்.

121. எட்டு உயிரும் மெய்யும் முதலாகிய எண்ணுப்பெயர்கள் வந்தால் ஈறுகெட்டு; டகரம் ணகரமாம். மற்றைய மெய்ம்முதற் பெயரும்உயிர்முதற்பெயரும் வந்தால் வழக்கத்திலியல்பாம்.

(உ-ம்.) எட்டு + ஆயிரம் = எண்ணாயிரம், எட்டு + ஆறு = எண்ணாறு; எட்டு + குதிரை = எட்டு குதிரை. எட்டு + இலை = எட்டிலை.

122. பத்துமுன் இரண்டு வந்தால் ஈற்றுயிர் மெய் கெட்டுத்தகரவொற்று னகரமாகும்.

(உ-ம்.) பத்து + இரண்டு = பன்னிரண்டு.

123. பத்து முன் ஒன்று,மூன்று,நான்கு,ஐந்து,ஆறு ஏழு;எட்டு, இவ்வேழெண்களும் ஆயிரமும்வந்தால்உம் மைத்தொகையில் ஈற்றுயிர்மெய்கெட்டு இன்சாரியை தோன்றும்.

(உ-ம்.)பத்து + ஒன்று = பதினொன்று,பதின்மூன்று பதினான்கு,பதினைந்து,பதினாறு,பதினேழு,பதினெட்டு பதினாயிரம் எனவரும்.

124.பத்துமுன் ஒன்று முதலாகிய எண்களும்ஆயி ரமும் வந்தால் பண்புத் தொகையில் ஈற்றுயிர்மெய் கெட்டு இற்றுச்சாரியை தோன்றும்.

(உம்.)பத்து + ஒன்று = பதிற்றொன்று,பதிற்றுமூன் று,பதிற்றுநான்கு,பதிற்றாயிரம் எனவரும்.

125. இரண்டுமுதல் எட்டீறாகிய எண்களின்முன் பத்தென்னும் எண்வந்தால் பத்தின்இடையில் நின்ற தகரங்கெடும்.

(உ-ம்.)இரண்டு + பத்து = இருபது, முப்பது நாற்பது, ஐம்பது, அறுபது, எழுபது, எண்பது.

126. இருபதுமுதல் எண்பதீறாகிய எண்களின் முன் ஒன்றுமுதல் ஒன்பதென்னும் அதையடுத்த

பிறபெயரும் வந்தால் நிலைமொழியீற்றுக்கயலில் தகர ஒற்றுத்தோன்றும்.

(உ-ம்.) இருபது + இரண்டு=இருபத்திரண்டு, முப்பத்துநான்கு, அறுபத்தேழனை, எண்பத்தொன்பது ரூபாய் எனவரும்.

127. இருபதுமுதல் எண்பதிறுகிய எண்களின் முன்னும்; ஒன்பதுமுன்னும், ஆயிரம்வந்தால் இடையில் இன்சாரியை தோன்றும்.

(உ-ம்.) இருபது + ஆயிரம்=இருபதினுயிரம், அறுபதினுயிரம், எண்பதினுயிரம், ஒன்பதினுயிரம் எனவரும்.

128. ஒன்பதை ஒழித்த ஒன்றுமுதல் பத்திறுகிய ஒன்பதெண்களும் இரட்டித்து வந்தால் நிலைமொழியின் முதலெழுத் தல்லாதவைகளெல்லாங்கெட வருமொழி உயிர்முதன் மொழியாயின் வகரமும், மெய்ம்முதன் மொழியாயின் வந்தமெய்யு மிகும்.

(உ-ம்.) ஒன்று + ஒன்று=ஒவ்வொன்று, இவ்விரண்டு, மும்மூன்று, நந்நான்கு, பப்பத்து, எனவரும்.

129. ஒன்பது என்னும் எண்முன் பத்துவந்தால் பதுகெட்டு னகரம் ணகரமாய் முதலிலிருக்கும் ஒகரம்

தகர ஒற்றிலேறி வருமொழியாகிய பத்து நூறுகத் திரியும்.

(உ-ம்) தொண்ணூறு.

130. ஒன்பதுமுன் நூறு வந்தால் பதுகெட்டு னகரம் ளகரமாய் நிலைமொழி ஒகரம் தகரவொற்றி லேறி வருமொழி ஆயிரமாகத்திரியும்.

(உ-ம்.) தொள்ளாயிரம். இக்காலத்தில் தொளாயிரம் எனவழங்குகிறது.

131. உயர்ந்த எண்முன் தாழ்ந்த எண்வந்தால் ஏகா ரச்சாரியைவரும்.

(உ-ம்) ஒன்று + கால் = ஒன்றேகால், இரண்டேமுக் கால், கலனே குறுணி.

132. ஒன்றுமுதலாகிய எண்களின்முன் அரைஎன் னும் எண்வந்தால் சாரியைபெறுது.

(உ-ம்) இரண்டு + அரை = இரண்டரை, ஏழரை.

133. கிழக்கு, ஈற்றுயிர் மெய்யுங் ககரவொற்றுங் கெட்டு முதல் நீளும்.

(உ-ம்.) கிழக்கு + கடல் = கீழ்கடல், கீழ்பால், கீழூர், எனவரும்.

134. தெற்கு, மேற்குக் கிழக்குகளோடும், பிறபெ யரோடும் புணர்ந்தால் நிலைமொழி யீற் றுயிர்மெய் கெட்டு றகரம் னகரமாகும்.

(உ-ம்.) தெற்கு+மேற்கு=தென்மேற்கு, தென்கிழக்கு, தென்னாடு, தென்மொழி எனவரும்.

135. மேற்கு,பிறபெயர்களோடுபுணரும்போது நிலைமொழியீறுகெட்டு றகரம் லகரமாதலும் இயல்புமாம்.

(உ-ம்,) மேற்கு+புறம்=மேல்புறம், மேல்கடல் மேற்கு+ஊர்=மேற்கூர், மேலூர் எனவரும்.

136. வடக்கு என்பது மேற்குக் கிழக்குப்பெயர்களோடும், பிறபெயரோடும், புணரும்போது நிலைமொழி யீற்றுயிர்மெய்யும் ககரவொற்றுங் கெடும்.

(உ-ம்.)வடக்கு+மேற்கு=வடமேற்கு, வடகிழக்கு, வடமலை, வடநாடு எனவரும்.

137. ஒடு, ஓடு, உருபின் முன்னும், அது உருபின் முன்னும் வலிமிகாது.

(உ-ம்.) அவனொடு+போனான்=அவனொடுபோனான், அவனோடு சொன்னான்,அவனது குதிரை.

138. விகாரப்பட்ட என்ன என்னும்வினாவின்முன் வலிமிகாது.

(உ-ம்.) என்ன+செய்தி=என்னசெய்தி; என்னகொடுத்தான்.

139. இரண்டாம் வேற்றுமைத் தொகைமுன் வலிமிகாது; விரிமுன் மிகும்.

(உ-ம்.) புளி + தின்ருன் = புளிதின்ருன், நீர் குடித்தான் எ-ம்; புளியை + தின்ருன் = புளியைத்தின்ருன், நீரைக்குடித்தான், எ-ம் வரும்.

140. இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனும்தொக்க தொகையில் ஒற்றுமிகும்.

(உ-ம்.) குடிமி + பையன் = குடிமிப்பையன். தயிர்க்குடம், எனவரும்,

141. உலகவழக்கிலே உயர்திணையில் இரண்டாம் வேற்றுமை விரிந்தேவரும்.

(உ-ம்.) தமயனை + கண்டான் = தமையனைக்கண்டான் எனவரும்.

142. வேற்றுமையில், ணகரமும், னகரமும், வல்லினம்வந்தால், டகர றகரங்களாம்; அல்வழியில் இயல்பாம்.

(உ-ம்.) மண் + குடம் = மட்குடம், பொன் + குடம் = பொற்குடம். மண்குறிது, பொன்குறிது என வரும்.

143. குறிலணையாத, ணகரமும், னகரமும் வந்த நகரந் திரிந்தபோது கெடும்.

(உ-ம்.) தூண் + நன்று = தூணன்று, பசுமணன்று, கோனல்லன், செம்பொனன்று எனவரும்.

144. வேற்றுமையில், லகர ளகரங்கள், வல்லினம் வந்தால் றகர டகரங்களாம்; அல்வழியில் இயல்பாம்.

(உ-ம்.) கல்+சட்டி=கற்சட்டி, முட்குறை, கல்குறிது, முள்குறிது.

145. லகர ளகரங்கள், இருவழியிலும், மெல்லெழுத்துவரின், னகர ணகரங்களாகத் திரியும்.

(உ-ம்.) கல்+மறைந்தது=கன்மறைந்தது; எள்+நெய்=எண்ணெய்.

146. அல்வழியில் தனிக் குற்றெழுத்தைச் சேராத லகர ளகரங்கள் வருமொழிமுதலில் இருந்த தசரம் றகர டகரங்களாகத் திரியும்போது கெடும்.

(உ-ம்.) தோன்றல்+தீயன்=தோன்றறீயன்; வேள்+தீயன்=வேடீயன் எனவரும்.

147. வேற்றுமையிலும் அல்வழியிலும்தனிக்குறிலைச்சாராத லகர, ளகரங்கள், வருமொழிமுதல் நகரம், னகர ணகரங்களாகத் திரியும்போது கெடும்.

(உ-ம்.) தோன்றல்+நல்லன் = தோன்றனல்லன், வேணல்லன் எ-ம், தோன்றல்+நன்மை=தோன்றனன்மை, வேணன்மை எனவும் வரும்.

148. னகர லகரங்களுக்குமுன், தகர, நகரங்கள் வந்தால், அவை றகர, னகரங்களாம்;

(உ-ம்.) பொன் + தீது = பொன்றீது, பொன்னன்மை, கல் + தீது = கற்றீது, கன்னன்று எனவரும்.

149. ணகர, ளகரங்களுக்குமுன், தகர நகரங்கள் வந்தால், அவை டகர ணகரங்களாம்.

(உ-ம்.) மண் + தீது = மண்டீது; மண் + நன்று = மண்ணன்று. முள் + தீது = முட்டீது. முள் + நன்று = முண்ணன்று.

150. மகரம் அல்வழியில் வல்லினம் வந்தால் அதற்கினவெழுத்தாகத்திரியும்.

(உ-ம்.) மரம் + குறிது = மரங்குறிது, மரஞ்சிறிது மரந்தீது.

151. மகரம் வேற்றுமையிலும் அல்வழியிலும் உயிரும் மெல்லினமும் இடையினமும் வந்தால் கெடும்:

(உ-ம்.) வட்டம் + ஆழி = வட்டவாழி, வட்டம் + நேமி = வட்டநேமி, வட்டம் + வளை = வட்டவளை எ-ம்; மரம் + அடி = மரவடி, மரம் + நார் = மரநார், மரம் + வேர் = மரவேர் எ-ம், இருவழியிலும் வந்தன.

152. மகரங்கெடநின்ற மொழிக்குமுன் வல்லெழுத்துத் தோன்றும்.

(உ-ம்.) குளம் + கரை = குளக்கரை.

153. எல்லாம் என்னுஞ்சொல் ஒன்றும் உருபை யேற்கும்போது மகரங்கெட்டு இடையில் அற்றுச் சாரியை தோன்றக் கடையில் உம்மைபெற்று வரும்.

(உ-ம்.) எல்லாவற்றையும், எல்லாவற்றாலும்.

154. மகரவீற்றுச் சொல்லோடு, அத்துச்சாரியை புணரும்போது மகரமும் சாரியைமுதல் அகரமுங் கெடும்.

(உ-ம்.) மரம்+அத்து+குறை=மரத்துக்குறை.

155. அன், இன், அல், அற்று, இற்று, அத்து, அம், ஏ, ஐ, கு, ன்; ஆம், இப்பன்னிரண்டும் சாரியைகளாம்.

(உ-ம்.) உண்டனன், பசுவினெய், வளையல், எல்லாவற்றினும், பதிற்றுப்பத்து, மரத்துக்கிளை, புளியங்காய், கலனேகுறுணி, பண்டைநாள், உய்குவாய், கோன், மண்ணுங்கட்டி.

156. அஃறிணைப்பெயர் அன்மொழியாகியும் ஆகுபெயராகியும் உயர்திணையை புணர்த்தின் இயல்பாம்.

(உ-ம்.) பொற்றொடிகை, அரசுகை.

157. மெய்யீற் றுயர்திணைப்பெயர் பொதுப்பெயர் இவைகளின்முன் வலிமிகாது.

(உ-ம்.) அவர்கை, தாய்கை.

புணரியல் முற்றிற்று.

—:o:—

# பெயரியல்.

158. சொல்லென்பது, இருதிணையைம்பாற் பொருள்களை மூன்றிடத்தும் வெளிப்படையாகவேனும் குறிப்பாகவேனும் உணர்த்துவது.

159. திணை இரண்டு — உயர்திணை, அஃறிணை.

(உ-ம்.) மனிதர், தேவர், நரகர், — உயர்திணை
விலங்கு, கல், மரம்—அஃறிணை.

160. மனிதருடைய உடம்பையும், உயிரையும் பிரித்தால் அவையும் அஃறிணையாம்.

161. பால் ஐந்து.

| | | |
|---|---|---|
| (உ-ம்.) | ஆண்பால் ... ... ... | அரசன். |
| | பெண்பால் ... ... ... | அரசி. |
| | பலர்பால் ... ... ... | அரசர். |
| | ஒன்றன்பால் ... ... ... | பசு. |
| | பலவின்பால் ... ... ... | பசுக்கள். |

162. உயர்திணைக்கு ஆண்பால், பெண்பால், பலர்பால் இம்மூன்றும்உரியன.

163. அஃறிணைக்கு ஒன்றன்பால், பலவின்பால், இவ்விரண்டும் உரியன.

164. கடவுளை உயர்திணையாகவும் அஃறிணையாகவும் சொல்லலாம்.

165. ஆணும் பெண்ணும் அல்லாத அலியை ஆணுறுப்பு மிகுந்திருந்தால் ஆணாகவும், பெண்ணுறுப்பு மிகுந்திருந்தால் பெண்ணாகவும் சொல்லலாம்.

166. இடம் மூன்று.

[உ-ம்.] தன்மை—நான்.
முன்னிலை—நீ.
படர்க்கை—அவன், அவள், அவர், அது அவை.

167. மொழியிரண்டு—ஒருமை, பன்மை.

(உ-ம்.) அது, அவை.

168. சொற்கள் நான்கு — பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல்.

(உ-ம்.) மண், பெண் ... ... பெயர்ச்சொல்.
வா, போ ... ... வினைச்சொல்.
மற்று, பின் ... ... இடைச்சொல்.
சால், நனி ... ... உரிச்சொல்.

169. இந்நான்கு சொற்களும் திசைச்சொல் வடசொல்லோடு கூடி அறுவகையாம்:

170. தாயைத் தள்ளை யென்பதும், தந்தையை அச்சனென்பதும், திசைச்சொல்.

171. யானையைக் குஞ்சரமென்பதும், முயற்சியைப்பிரயத்தன மென்பது முதலியன வடசொல்.

172. தமிழுக்குரிய நான்குவகைச் சொற்களில் உரிச்சொல் ஒழிய மற்றை மூன்றில் ஒவ்வொன்றும் இயற்சொல் திரிச்சொல்லென இருவகையாம்.

173. இயற்சொல்லாவது யாவருக்கும் பொருள் விளங்கும் சொல்.

(உ-ம்) மண், பொன், மரம், முதலியன பெயரியற் சொல், வா, போ, முதலியன, வினையியற்சொல், வீட்டை, வீட்டில், இவற்றில் ஐ-இல்-இடையியற் சொல்.

174. திரிச்சொல்லாவது ஒருபொருள் குறித்த பல சொல்லாகியும் பலபொருள் குறித்த ஒரு சொல்லாகியும் கற்றோராற் பொருளறியப்படுஞ் சொல்லாம்.

(உ-ம்.) கிள்ளை, சுகம், தத்தை—இவை கிளியென் கிற ஒரு பொருள்குறித்த பலபெயர்த் திரிசொல்
வாரணம்—இது யானையையும், கோழியையும், சங்கு முதலிய, பலபொருள் குறித்த ஒரு பெயர்த் திரிசொல்.
படர்ந்தான், சென்றான்—இவை போயினனென ஒரு பொருள் குறித்த பலவினைத் திரிசொல்.
வரைந்தான்—இது நீக்கினன்; கொண்டான் என் கிற பலபொருள் குறித்த ஒருவினைத் திரிசொல்.

175. வழக்கு; இயல்புவழக்கு, தகுதிவழக்கு என இருவகைப்படும்.

176. இயல்பு வழக்கு என்பது ஒரு பொருளுக்கு இயல்பாய் அமைந்தசொல்லால் அப்பொருளைக்கூறு வது.

177. அது இலக்கணமுடையது, இலக்கணப்போலி, மரூஉ என மூன்றுவகைப்படும்.

178. இலக்கணமுடையது என்பது இலக்கணநெறியால் வருவது.

(உ-ம்.) நிலம். நீர்.

179. இலக்கணப்போலி என்பது இலக்கணத்திற்கு ஒத்தில்லாவிட்டாலும் இலக்கணமுடையது போல வருவது.

(உ-ம்.) இல்முன் என்பது முன்றில் எ-ம். நகர்ப்புறம் என்பது புறநகர் எ-ம், கடைப்புறம் என்பது புறங்கடை எ-ம் வரும்.

180. மரூஉ என்பது இலக்கணம் சிதைந்து மருவியது.

(உ-ம்.) அருமருந்தன்னபிள்ளை என்பது அருமருந்தபிள்ளை எ-ம்; ஆயிற்று என்பது, ஆச்சு எ-ம்; வரும்.

181. தகுதி வழக்கென்பது ஒரு பொருளுக்கு இயல்பாயுள்ள சொல்லை ஒழித்துத் தகுதியாகிய வேறு சொல்லால் அப்பொருளைக் கூறுவது. அது இடக்கரடக்கல், மங்கலம்; குழூஉக்குறி என மூன்று வகைப்படும்.

182. இடக்கரடக்கல், சொல்லத் தகாததை மறைத்துச்சொல்லுவது.

(உ-ம்.) கால் கழுவி வந்தேன், பவ்வீ.

183. மங்கலம், மங்கலமில்லாததை யொழித்து மங்கலமாகக் கூறுவது,

(உ-ம்.) நன்காடு; தாலிபெருகிற்று

184. குழூஉக்குறி என்பது ஒரு கூட்டத்தார்யாதாயினும் ஒரு காரணத்தால் ஒரு பொருளினது சொற்குறியை யொழித்து வேறொரு சொற்குறியாற் கூறுவது.

(உ-ம்.) சொல்விளம்பி, பறி.

185. சொல் பொருளை உணர்த்துமிடத்து, குறிப்பும் வெளிப்படையுமென இருவகைப்படும்.

186. அவற்றுள், குறிப்பு ஒன்றொழிபொதுச்சொல், விகாரம், தகுதி; ஆகுபெயர், அன்மொழித்தொகை, வினைக்குறிப்பு, முதற்குறிப்பு, தொகைக்குறிப்பு, பிறகுறிப்பு எனப் பலவாம். இவைகளல்லாதது வெளிப்படையாம்.

(உ-ம்.) ஆயிரமக்கள் போர்செய்தார்கள்—இதில் மக்களென்னும் பொதுப்பெயரும், செய்தார்கள் என்கிற பொதுவினையும், போர் என்னுங் குறிப்பால் உயர்திணைப் பெண்பாலை யொழித்து ஆண்பாலைக்காட்டின.

மரைமலர்—இந்த முதற்குறை விகாரச் சொல்மலர் என்னுங் குறிப்பால் தாமரையைக்காட்டிற்று.

திருமுகம்படித்தான்—இத்தகுதி படித்தான் என்னுங் குறிப்பால் ஓலை யென்பதை காட்டிற்று.

புளிதின்ருன்— இந்த ஆகுபெயர் தின்ருன் என்னுங் குறிப்பால் அதன் பழத்தைக்காட்டிற்று.

தேன்மொழிசொன்ருள்— இந்தத் தேன்மொழி யென்னும் அன்மொழித்தொகை சொன்ருள்என்னுங்குறிப்பால் தேன்போன்ற மொழியையுடைய பெண்ணைத் தெரிவித்தது

இவனிப்போது பொன்னன்—இங்கே பொன்ன னென்னுஞ் சொல் இப்போதென்னுங் குறிப்பால் பெயர்ப்பொருளை யொழித்துப் பொன்னையுடையவனுய் இருக்கின்ருன் என்னும் வினைக் குறிப்பைக் காட்டிற்று.

ஆத்திச்சூடி படித்தான்—இம்முதற் குறிப்பு, படித்தா னென்னுங் குறிப்பால் அந்தச் சொற்களை முதலிலுடைய நூலைக்காட்டிற்று.

ஐவரோடு குந்திவந்தாள்—இந்தத் தொகைக்குறிப்பு, குந்தி யென்னுங் குறிப்பால் பாண்டவரைத் தெரிவித்தது.

கல்லைக்கடிக்க நன்ருய்ச் சமைத்தாய், பாயர்வேங்கை, பறவாக்கொக்கு, என்னும் பிறகுறிப்பு கல்லைக்

சடிக்க என்னுங் குறிப்பால் நன்ருய்ச் சமைக்க வில்லை யென்றும், பாயா, பறவா எனலுங் குறிப் பால்வேங்கைமரமென்றும் குதிரையென்றும் தெரிவித்தது.

187. ஒருவன், ஒருத்தி யென்கிற பெயரன்றி இரண்டு மூன்று முதலான எண்கள் காரணமாக ஆண் பாற் பெயரும், பெண்பாற் பெயரும் வரமாட்டா.

188. ஒருவரென்கிற சொல் உயர்திணை ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும், பொதுவில் பன்மை வினையைக் கொள்ளும்.

(உ-ம்.) ஆடவருள் ஒருவர் அறத்தின்வழி நிற்பார்; பெண்டிருள் ஒருவர் கொழுநன்வழி நிற்பார்.

189. து, வை, விகுதிகளைப் பெருத அஃறிணைப் பெயர்கள் அத்திணை இருபாலுக்கும் பொதுவாம்.

(உ-ம்.) குதிரை வந்தது, குதிரை வந்தன, மரம் வளர்ந்தது, மரம் வளர்ந்தன.

190. பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில், நால்வகையான அளவு, சொல், தானி, கருவி, காரியம், கருத்தன், இவை முதலான பெயர்களுள் ஒரு பொருளின் இயற்பெயர், அப்பொருளுக் கிசைந்த பிறிதொரு பொருளுக்குப் பழையவழியால் ஆகிவருமாயின் ஆகுபெயராம்.

(உ-ம்.)

தாமரைபோன்றபாதம் ... பொருளாகுபெயர்.
முதலாகுபெயரொன்றும்சொல்லலாம்.
ஊரடங்கிற்று ... இடவாகுபெயர்.
காரறுத்தது ... காலவாகுபெயர்.
வெற்றிலைநட்டான் ... சினையாகுபெயர்.
வெள்ளைவந்தது ... குணவாகுபெயர்.
வற்றலுண்டான் ... தொழிலாகுபெயர்
காலாலேநடந்தான் எண்ணலளவையாகுபெயர்.
இப்புளிவீசை ... எடுத்தலளவையாகுபெயர்.
நாழியுடைந்தது ... முகத்தலளவையாகுபெயர்.
இந்தவீடு ஐம்பதடி ... நீட்டலளவையாகுபெயர்.
அவன் சொல்லையறிந்தான் ... சொல்லாகுபெயர்.
விளக்குஒடிந்தது ... தானியாகுபெயர்.
திருவாசகம் ... ... காரணவாகுபெயர்.
இந்நூலலங்காரம் ... காரியவாகுபெயர்.
திருவள்ளுவர்படித்தான் ... கர்த்தாவாகுபெயர்.
வெற்றிலைநட்டான் ... அடையடுத்தவாகுபெயர்.

191. பெயர், ஐ, ஆல், கு, இன், அது, இல், விளி என வேற்றுமை எட்டாம்.

192. எழுவாய் வேற்றுமையாவது, ஐ, முதல் ஆறுருபுகளை ஏற்றுத் திரிபில்லாமலிருக்கிற பெயரேயாம்; அது வினையையும் பெயரையும் வினாவையும் கொள்ள

வருதல் அதன்பொருளாம். அதை வினைமுதலென்றும், கர்த்தாவென்றும் செய்பவனென்றும் சொல்லலாம்.

(உ-ம்.) சாத்தன் வந்தான், பசுவொன்று, அவன் யார்.

193. இரண்டாம் வேற்றுமையின் உருபு, ஐ ஆகும். அதன்பொருள் ஆக்கல். அழித்தல், அடைதல், நீத்தல் ஒத்தல், உடைமை, முதலியனவாம்.

(உ-ம்.) குடத்தைச்செய்தான்..ஆக்கப்படுபொருள்.
வீட்டையிடித்தான் ... அழிக்கப்படுபொருள்.
ஊரையடைந்தான் ... அடையப்படுபொருள்.
மனைவியைவிட்டான் ... நீக்கப்படுபொருள்.
புலியையொத்தான் ... ஒக்கப்படுபொருள்.
பொன்னையுடையான் ... உடைமைப்பொருள்.

194. மூன்றும் வேற்றுமையினுருபு ஆல், ஒடு, ஓடு, என்பனவாம்; அவைகளின் பொருள் கருவிப் பொருளும், கருத்தாப்பொருளும், உடனிகழ்ச்சிப் பொருளும் ஆம்.

195. கருவி, முதற்கருவி, துணைக்கருவி என இருவகைப்படும்.

(உ-ம்.)

மண்ணாற்செய்தகுடம் ... முதற்கருவி.
தண்டசக்கரங்களாற் செய்தகுடம் ... துணைக்கருவி.

196. கருத்தாகவும் இயற்றுதற் கருத்தா, ஏவுதற் கருத்தா என இருவகைப்படும்.

(உ-ம்.)

தச்சனாகியகோயில் ... இயற்றுதற்கருத்தா.
அரசனாகியகோயில் ... ஏவுதற்கருத்தா.
தகப்பனோடுமகன்வந்தான் உடனிகழ்ச்சிப்பொருள்.

197. நான்காம் வேற்றுமையின் உருபு, கு. ஆகும். அதன்பொருள் கொடை, பகை, நேர்ச்சி, தகுதி, அதுவாதல்; பொருட்டு; முறை முதலானவைகளாம்.

(உ-ம்.)

யாசகர்க்குப் பொன்னைக் கொடுத்தான் ... கொடை.
பாம்புக்குப் பகை கருடன் ... ... பகை.
சாத்தனுக்குச் சிநேகன் கொற்றன் ... நேர்ச்சி.
விலையுயர்ந்த ஆபரணம் அரசர்க்குரியது... தகுதி
கடுக்கனுக்குப்பொன் ... அதுவாதல்.
கூலிக்கு வேலைசெய்தான் ... பொருட்டு,
அவனுக்கிவன்மகன் ... முறை.

198. ஐந்தாம் வேற்றுமையினுடைய உருபு, இன், இல், என்பனவாம்; அவைகளின் பொருள் நீக்கப் பொருளும், ஒப்புப்பொருளும், எல்லைப்பொருளும், ஏதுப்பொருளுமாம்.

(உ-ம்.)

மலையின்வீழருவி ... நீக்கப்பொருள்.
காக்கையிற்கரிதுகளம்பழம் ... ஒப்புப்பொருள்.
மதுரையின்வடக்குச்சிதம்பரம் ... எல்லைப்பொருள்.
கல்வியிற்பெரியன்கம்பன் ... ஏதுப்பொருள்.

199. ஆறும் வேற்றுமைக்கு உருபு அது, உடைய, என இரண்டாம். அவற்றின் பொருள் பண்பு, உறுப்பு, ஒன்றன் கூட்டம், பலவினீட்டம், திரிபினாக்கம், ஆகிய ஐந்து தற்கிழமைப் பொருளும், பொருள்; இடம், காலம் என்கிற மூவகைப் பிறிதின் கிழமைப் பொருளுமாம்.

(உ-ம்.)

சாத்தனதுகருமை ... குணப்பண்புத்தற்கிழமை.
சாத்தனதுவரவு ... தொழிற்பண்புத்தற்கிழமை.
சாத்தனதுகை ... ... ...உறுப்புத்தற்கிழமை.
மனிதரதுகூட்டம் ... ஒன்றன்கூட்டத்தற்கிழமை.
படைகளதுதொகுதி ... பலவினீட்டத்தற்கிழமை.
நெல்லினதுபொரி ... ... திரிபினாக்கத்தற்கிழமை
சாத்தனதுபசு ... ... பொருட்பிறிதின்கிழமை.
சாத்தனதுவீடு ... ... ...இடப்பிறிதின்கிழமை.
சாத்தனதுநாள் ... ... காலப்பிறிதின்கிழமை.

200. இதுவன்றி எனதுயிர் என உடைமையும் உடையதும் வேறாகாத ஒற்றுமைப் பொருளிலும் வரும்; இது ஒற்றுமைக்கிழமை.

201. ஏழாம் வேற்றுமையின் உருபு இல், முதலானவைகளாம்; அவ்வுருபின் பொருள், பொருள் முதலாகிய ஆறும், தற்கிழமை, பிறிதின்கிழமை, இவ்விரண்டிற்கும் இடமாய் நிற்றலாம்.

(உ-ம்.)

| | | |
|---|---|---|
| மணியில் ஒளி ... ... | தற்கிழமை. | பொருள் இடமாயிற்று. |
| பனையில் அன்றில் | பிறிதின்கிழமை. | |
| ஊரில்வீடு ... ... | தற்கிழமை. | இடம் இடமாயிற்று. |
| ஆகாயத்தில் பருந்து ... | பிறித்ன். | |
| நாளின்நாழிகை ... | தற்கிழமை. | காலம்இடமாயிற்று. |
| சித்திரையில்பாதிரிபூத்தது | பிறிதின். | |
| கையில்விரல் ... ... | தற்கிழமை | உறுப்பு இடமாயிற்று. |
| கையில்மோதிரம் ... | பிறிதின். | |
| கறுப்பில் அழகு ... | தற்கிழமை | பண்பு இடமாயிற்று. |
| இளமையிற்செல்வம் ... | பிறிதின். | |
| ஆட்டத்தில் அபிநயம் ... | தற்கிழமை. | தொழில்இடமாயிற்று. |
| ஆட்டத்தில் பாட்டு ... | பிறிதின். | |

202. எட்டாம் வேற்றுமையினுடைய உருபுகள், விளியடைந்த பெயரினுடைய ஈறு திரிதலும், கெடுதலும், மிகுதலும், ஈற்றயலெழுத்துத் திரிதலும், இயல்பாதலும் முதலியவைகளாம்.

203. இவற்றின் பொருள் படர்க்கைப் பொருளை முன்னிலையாக அழைத்தலாம்.

(உ-ம்.) அம்மை-அம்மா ... ... ஈறுதிரிதல்.
அரசன்-அரசு ... ஈறுகெடுதல்.
மகன்-மகனே ... ... மிகுதல்.
மக்கள்-மக்காள் ... ஈற்றயலெழுத்துத்திரிதல்.
தம்பி ... ... இயல்பு.

204. ஐகாரத்தை இறுதியிலுடைய பொதுப் பெயரின் ஈறு ஆ, ஆய், என்று திரியும்.

(உ-ம்.) அன்னே, அன்னு; பிள்ளே, பிள்ளாய்; என வருதல் காண்க.

205. உயர்திணை, அஃறிணைப் பெயர்களினீற்றைகாரம் ஆய், எனத்திரியும்,

(உ-ம்.) நங்கை, நங்காய்; நாரை, நாராய்.

206. னகர வீற்றுப் பெயர், ஈறு கெடுதலும், ஈறு கெட்டு அயல் நீளுதலும், அதனோடு ஓகார மிகுதலும், ஏகாரமிகுதலும், இயல்பாதலும், அதனோடு ஏகார மிகுதலும், ஈறுகெட்டு அயலகரம் ஏகாரமாதலும், விளியுருபாம்.

(உ-ம்.) அப்ப, அப்பா, அப்பாவோ, ஐயாவே, அப்பன், அப்பனே, ஐயே

207. அண்மை* விளியில் இயல்பும், சேய்மை† விளியில் ஈறு நீளுதலும், ஈறுகெட்டு அயல் நீளுதலும், உருபாம்.

(உ-ம்.) தம்பி ... ... அண்மைவிளி.
தம்பீ, அப்பா ... ... சேய்மைவிளி.

*அண்மை - அருகு. †சேய்மை - தூரம்.

208. தன்மை முன்னிலைப்பெயர்களும் சுட்டுப் பெயரும், வினாப்பெயரும், தான், தாம், என்னும் பொதுப் பெயரும் விளிக்கப்படாவாம்.

209. ஐ முதலிய ஆறுருபுகளையும் ஏற்கும்போது தான் தாம் என்னும் படர்க்கைப் பெயர்கள் தன், தம், எனவும்; யான், யாம், நாம், என்னும் தன்மைப் பெயர்கள் என், எம், நம், எனவும்; நீ, நீர், என்னும் முன்னிலைப் பெயர்கள், நின், உன், நும், உம், எனவும், முறையே விகாரப்பட்டுக் குவ்வுருபு ஒன்றற்கும் அகரச் சாரியைபெறும்.

(உ-ம்.) தன்னை, தன்னால், தனக்கு, தன்னின், தனது தன்னில், எ-ம்; தம்மை, எ-ம்; என்னை, எம்மை; நம்மை, எ-ம்; உன்னை, நின்னை, உம்மை, நும்மை, எ-ம்; நுமக்கு எ-ம்; வரும்.

210. நான் என்பது எழுவாய் ஒன்றையே ஏற்கும்

(உ-ம்.) நான் கண்டேன்.

211. எல்லைப்பொருளில் வரும் இன்னுருபும் ஆறும் வேற்றுமை உருபும், பெயரையும், இவையல்லாத வேற்றுமைகள் வினையையும்; நான்காம் உருபும் ஏழாம் உருபும் வினையோடு பொருந்திவரும் பெயரையும், கொண்டு முடியும்.

(உ-ம்.) மலையின் வடக்குத் திருவொற்றியூர், அவனதுகை எ-ம்; பசுவந்தது, வீட்டைக் கட்டினுன், பிரம்பாலடித்தான், அவனுக்குக் கொடுத்தான், ஊரின் நீங்கினுன், பாயிற் படுத்தான், மயிலே வா, எ-ம்; நோய்க்குக் கொடுக்குமருந்து, மலையிலுள்ள மருந்து எ-ம், வரும்.

பெயரியல் முற்றிற்று.

---

## வினையியல்.

---

212. வினைச்சொல் பொருளின் புடைபெயர்ச்சியாகிய தொழிலை யுணர்த்துவது.

213. அது செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செயப்படுபொருள் இந்த ஆறினையுங் காட்டும்.

(உ-ம்.) வனைந்தானென்றபோது, குயவனாகியசெய்பவனும், மண்ணாகிய முதற்கருவியும், தண்டமுந் திரிகியுமாகிய துணைக்கருவிகளும், வனைதற்கு ஆதாரமாகிய இடமும், வனைதலாகிய செயலும், இறந்தகாலமும், குடமாகிய செயப்படுபொருளும் ஆகிய இவ்வாறினையுங் கொடுத்தது காண்க.

214. செயப்படுபொருள் குன்றிய வினையாயின் அது ஒழிந்த ஐந்து பகுப்பையே காட்டும்.

(உ-ம்.) இருந்தான், இதனுற்காண்க.

215. முற்றுவினைச் சொல்லில் பகுதியால் செயலும், இடைநிலை முதலியவற்றால் காலமும், விகுதியால் செய்பவனும்; எச்சவினைச் சொல்லில் பகுதியால் செயலும், இடைநிலை முதலியவற்றால் காலமும் வெளிப்படையாகவும், மற்றவை குறிப்பாகவும் வரும்.

(உ-ம்.) உண்டான், உண்டு, உண்ட.

216. வினை—தெரிநிலை, குறிப்பு, என இரண்டு வகைப்படும்.

217. தெரிநிலைவினை—செயலும் காலமும் வெளிப்படையாகத் தெரியநிற்பது.

(உ-ம்.) வந்தான்.

218. தெரிநிலைவினை—தன்வினை, பிறவினை, எனவும் செயப்படுபொருள் குன்றியவினை, செயப்படுபொருள் குன்றாவினை எனவும், செய்வினை, செயப்பாட்டுவினை எனவும், அறுவகைப்படும்.

219. தன்வினைமுதலிய அறுவகை வினையில் ஒவ்வொன்றும், முதனிலை, தொழிற்பெயர், வினைமுற்று, வினையெச்சம், பெயரெச்சம் என ஐந்துவகைப்படும்.

(உ-ம்.) தன்வினை—உண், உண்ணல், உண்டான், உண்டு, உண்ட, எனவரும்.

220. முதனிலை முதலாக மேற்சொல்லிய வினையின் பகுப்பு ஐந்தனுள் முதனிலை ஒழிந்த மற்றைய நான்

கும், உடன்பாடும் எதிர்மறையும், என இரண்டிரண்டு வகைப்படும்.

(உ-ம்.) தன்வினை உடன்பாடு — முன்சொன்ன உதாரணமேயாம்.

தன்வினை எதிர்மறை—உண்ணாமை, உண்ணான், உண்ணாமல், உண்ணாத.

பிறவினை உடன்பாடு—உண்பி, உண்பித்தல், உண்பித்தான், உண்பித்து, உண்பித்த.

பிறவினை எதிர்மறை—உண்பியாமை, உண்பியான், உண்பியாமல், உண்பியாத.

221. தன்வினை, பிறவினை, செயப்படுபொருள்குன்றியவினை, செயப்படுபொருள் குன்றாவினை, இந்நான்கும் செய்வினையேயாம்.

222. செயப்படு பொருள் குன்றியவினை ஒழிந்த மற்றை மூவகை வினைப்பகுதியோடு இடையே அகரச் சாரியை வரப் படு விகுதி சேர்ந்தால் செயப்பாட்டு வினையாம்.

(உ-ம்.) உடன்—உண்ணப்படு, உண்ணப்படுதல், உண்ணப்பட்டான், உண்ணப்பட்டு, உண்ணப்பட்ட.

எதிர்—உண்ணப்படாமை, உண்ணப்படான், உண்ணப்படாமல், உண்ணப்படாத.

உடன்—உண்பிக்கப்படு, உண்பிக்கப்படுதல், உண்பிக்கப்பட்டான், உண்பிக்கப்பட்டு, உண்பிக்கப்பட்ட.

எதிர் — உண்பிக்கப்படாமை, உண்பிக்கப்படான், உண்பிக்கப்படாமல்,உண்பிக்கப்படாத.

மற்றவைகளையும் இவ்வாறே காண்க.

223. சில வினைச்சொற்கள்;பொதுவினையாகவரும்,

(a.) தன்வினைக்கும் பிறவினைக்கும் பொதுவினை.

(உ-ம்.) தேற்றிக்கொடுத்தான்.

b.) செய்பொருள் குன்றிய வினைக்கும், செய்பொருள் குன்றாவினைக்கும் பொதுவினை.

(உ-ம்.) வெருத்தான்.

(c.) விதி வினைக்கும் மறை வினைக்கும் பொதுவினை.

(உ-ம்.) வளர்த்தான்.

(d.) செய்வினைச்கும் செயப்பாட்டு வினைக்கும் பொதுவினை.

(உ-ம்.) விண்டகமலம், விண்டகாய்.

224. அன், ஆன், என்னும் இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் உயர்திணையாண்பாற் படர்க்கைவினைமுற்றும், குறிப்பு முற்றுமாம்.

(உ-ம்) நடந்தனன், நடந்தான், எனவும்; குழையன் குழையான், எனவும் வரும்.

225. அள், ஆள், என்னும் இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் உயர்திணைப் பெண்பாற் படர்க்கை வினைமுற்றும், குறிப்புமுற்றுமாம்.

(உ-ம்.) நடந்தனள், நடந்தாள், எனவும்; குழையள், குழையாள் எனவும்; வரும்.

226. அர், ஆர், இவ்விருவிகுதிகளையும்ஈற்றிலுடைய மொழிகள் உயர்திணைப் பலர்பாற் படர்க்கை வினைமுற்றும், குறிப்பு முற்றுமாம்.

(உ-ம்.) நடந்தனர், நடந்தார், எனவும்; குழையர், குழையார், எனவும்; வரும்.

227. து, று, இவ்விரு விகுதிகளை இறுதியிலுடைய மொழிகள் அஃறிணை யொன்றன்பாற் படர்க்கை வினைமுற்றும், குறிப்பு முற்றுமாம்.

(உ-ம்.) வந்தது, குழையது, ஆயிற்று, அற்று.

228. அ, இவ்விகுதியை யிறுதியிலுடைய சொல் அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை வினைமுற்றும், குறிப்பு முற்றுமாம்.

(உ-ம்.) வந்தன, புதியன எனவரும்.

229. ஆகாரவிகுதி அஃறிணைப் படர்க்கைப் பன்மை எதிர்மறை வினை முற்றிறுதியில் வரும்.

(உ-ம்.) நடவா.

230. தன்மை வினைமுற்றும், முன்னிலை வினைமுற்றும், ஏவல் வினைமுற்றும்; வியங்கோள் வினைமுற்றும் வேறு, இல்லை, உண்டு, அன்று, என்னும் குறிப்பு வினைமுற்றுகளும், வினையெச்சமும் பெயரொச்சமும், இருதிணைக்கும் பொதுவாம்.

231. என் விகுதி தன்மை யொருமை வினைமுற்றுக்கும் குறிப்பு வினைமுற்றுக்கும் வரும்.

(உ-ம்.) நடந்தேன், குழையேன், எனவரும்.

232. ஒம் விகுதி தன்மைப்பன்மை வினைமுற்றிலும் குறிப்பு முற்றிலும் வரும்.

(உ-ம்.) நடப்போம், தாரிஞேம்.

233. எம், ஆம், இவ்விரு விகுதிகளும் செய்யுளில் தன்மைப் பன்மை வினைமுற்றைக் காட்டவரும்.

(உ-ம்.) வந்தேம், வந்தாம், தாரினேம், தாரிஞம்.

234. ஐ, ஆய், இவ்விரு விகுதிகளும் முன்னிலை ஒருமை வினைமுற்றுக்கும், குறிப்பு முற்றுக்கும் வரும்.

(உ-ம்.) நடந்தனை, குறியை, நடந்தாய், குறியாய் எனவரும்.

235. ஈர் விகுதி முன்னிலைப்பன்மை வினைமுற்றுக்கும், குறிப்பு முற்றுக்கும் வரும்.

(உ-ம்.) வந்திர், குழையீர்.

236. தன்மையோடு முன்னிலையையாவது, படர்க்கையையாவது, அவ்விரண்டையுமாவது சேர்த்து

ஒரு வினைகொண்டு முடிக்கும்போது ஓம் விகுதியால் முடிக்க.

(உ-ம்.) நானும் நீயும் போனோம்; நானும் அவனும் போனோம்; நானும் நீயும் அவனும் போனோம் எனவரும்.

237. முன்னிலையோடு படர்க்கையைச் சேர்த்து முடிக்கும்போது முன்னிலைக்குரிய ஈர் விகுதியால் முடிக்க.

(உ-ம்.) நீயும் அவனும் போனீர் எனவரும்.

238. ஆய், இ, விகுதிகள் ஏவலொருமைக்கும், உம், ஈர், மின், அதன் பன்மைக்கும், எதிர்காலத்தை உணர்த்திவரும்.

(உ-ம்.) உண்ணாய், செய்தி, உண்ணும், உண்ணீர், உண்மின் எனவரும்.

239. ஏவலொருமையில் விகுதி குன்றியும் வரும்.

(உ-ம்.) உண், காண், பார்.

240. க, இ, எதிர்காலங்காட்டும் இவ்விரண்டு விகுதிகளையும் ஈற்றிலுடையவினைமுற்று வியங்கோள்வினைமுற்றும். அது மூன்றிடத்திலும் ஐம்பாலிலுஞ் செல்லும்.

(உ-ம்.) யான்வாழ்க, நீவாழ்க, அவன் வாழ்க, அவள் வாழ்க, அவர்வாழ்க, அதுவாழ்க, அவை

வாழ்க, யான்வாழி, நீவாழி, அவன்வாழி, அவள்வாழி, அவர்வாழி, அதுவாழி, அவைவாழி, எனவும் வரும்.

241. உயர்திணைச்சொல்லையும் அஃறிணைச்சொல்லையும் எண்ணி, ஒருவினைகொண்டு முடிக்கும்போது, உயர்திணைப் பலர்பால் வினைமுற்றைக் கொண்டுமுடிக்க,

(உ-ம்.) சாத்தனும் குதிரையும்போனார்கள்.

242. உயர்திணைத் தன்மைச் சொல்லோடு அஃறிணையைக்கொண்டு முடிக்குங்கால், தன்மைப்பன்மை வினைமுற்றால் முடிக்க.

(உ-ம்.) நானும் குதிரையும் போனோம்.

243. முன்னிலைச் சொல்லோடு அஃறிணையை எண்ணி முடிக்குங்கால், முன்னிலைப்பன்மைவினைமுற்றால் முடிக்க.

(உ-ம்.) நீயும் குதிரையும் போனீர்கள்.

244. அகர விகுதியையும், காலங்காட்டும் உம்விகுதியையும் ஈற்றிலுடையதாய்க் காலமும் செயலும் தோற்றிப், பாலுடனே செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செயப்படுபொருள் என்கிற ஆறும் ஒழியநிற்பது பெயரெச்சமாம்.

(உ-ம்.) உண்ட, உண்கிற, உண்ணும். சாத்தன், கலம், வீடு, தொழில், பகல், சோறு, முறையே செ

ய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செயப்படுபொருள் ஆறும் முடிக்குஞ் சொல்லாக வந்தன.

245. செய்யுமென்னும் பெயரொச்சமே படர்க்கை முற்று வினையும் ஆம்.

(உ-ம்.) மழை வரும்.

246. செய்யு மென்னும் பெயரொச்சத்திற்கும் செய்யுமென்னும் வினைமுற்றிற்கும் இறுதியிலுள்ள உயிர்மெய்கெடும்.

(உ-ம்.) சாவுங்குதிரை, சாங்குதிரை; குணமாகும் குணமாம் எனக்காண்க.

247. செய்யுமென்னும்ஏவற்பன்மைவினைமுற்றிறுதி உயிர்மெய்யுங் கெட்டுவரும்.

(உ-ம்.) போம் பெரியோரே.

248. செய்து, செய, செயின், என்னும் வாய்பாட்டை அடைந்து, உ விகுதியையும் காலங்காட்டுவனவாகிய இ, ய், அ, கு, இன், ஆல், கால், இவ்வேழு விகுதிகளையும் ஈற்றில் உடைத்தாய்த் தொழிலையும் காலத்தையுந் தோற்றிப் பாலுடனே கொண்டு முடியும் வினையொழிந்து நிற்பதுவினையெச்சமாம்.

(உ-ம்.) வந்து, ஓடி, போய்; இவை செய்தென்னும் வாய்ப்பாட்டு இறந்தகால வினையெச்சம்.

உண்ண, உண்ணற்கு, இவை செயவென்னும் வாய்பாட்டு நிகழ்கால வினையெச்சம்.

உண்ணின், உண்டால், உண்டக்கால், இவை செயினென்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம்.

249. செய்தென்னும் வினையெச்சம், தன்வினை முதல் வினையையே கொண்டு முடியும்.

(உ-ம்.) உண்டு வந்தான்.

250. செயவென்னும் வினையெச்சமும், செயினென்னும் வினையெச்சமும், தன் வினைமுதல்வினையையும்; வேறு வினைமுதல்வினையையுங் கொண்டு முடியும்.

(உ-ம்.) அவனுண்ணவந்தான்—தன்வினைமுதல் வினையைக்கொண்டு முடிந்தது.

அவன்வரப் பார்த்தேன்—வேறுவினைமுதல் வினையைக்கொண்டு முடிந்தது.

அவனுண்டால் வருவான்—தன்வினை.

அவனுண்டாற்போவேன்—வேறுவினை.

251. செயவெனெச்சம்,செய்தெனெச்சமாகத்திரிந்தாலும் அதன்பொருள் திரியாது.

(உ-ம்.) நான்வந்து பொன்னன் போனான் என்பதற்கு நான்வரப் பொன்னன் போனான் என்பது பொருள்.

252. செய்யுமென்னும் முற்று உயர்திணை படர்க்கை யொருமைக்கும் அஃறிணைபடர்க்கை யொருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய்வரும்.

(உ-ம்.) அவன் நடக்கும், அவள் நடக்கும், அதுவரும், அவை வரும்.

253. பொருளாதியாறும் அடியாகப்பிறந்த பெயர்கள் வினைகொண்டு முடியுஞ் சொற்களுக்குப் பயனிலையாக நின்று குறிப்பாகக் காலத்தைக் கொள்ளுமானால் அது குறிப்புவினையாம்.

(உ-ம்.) சாத்தன் உடையான், பொன்னையுடையான், அறிவாற்பெரியன், உனக்குள்ளான், உருவத்திற் சிறியன், காதிற் குழையன், எ-ம்; வந்துபொன்னன்; செய்தால் உரியன், முன்பு பொன்னன், இன்று பொன்னன், இனிப் பொன்னன், எ-ம் வரும்.

254. அ, இய, இவ்விகுதிகளும் பண்படி புணர்ந்து முடிவது, குறிப்புப் பெயரொச்சமாம்.

(உ-ம்.) செய்யகுதிரை, உள்ளமனிதன், கரியமால் வலிய குதிரை.

255. பண்படியாகத்தோன்றிஅகர ஈறுக நின்று வினையைக்கொண்டு முடிவது குறிப்புவினையெச்சமாம்.

(உ-ம்.) மெல்லப்போனான், பையச்சென்றான், வலியச்சொன்னான்.

256. இல், அல் என்னும் எதிர்மறைப் பண்படிகளோடு ஐ, உ, விகுதிகள் முறையே புணர்ந்த வினைமுற்றுகளும், உள் என்னும் உடன்பாட்டுப் பண்படியோடு டுவ்விகுதி புணர்ந்த வினைமுற்றும், இருதிணை யைம்பால்களுக்கும் பொதுவாகிய வினைமுற்றாம்.

(உ-ம்.) அவன், அவள், அவர், அது, அவை, நான், நாம், நீ, நீர், இல்லை, அன்று; இவை எதிர்மறைப் பொதுவினைக் குறிப்புமுற்றுகள். உண்டு இது உடன்பாட்டுப் பொது வினைக்குறிப்புமுற்று.

257. இல், என்னும் பண்படியோடு மூன்றிடத்துக்கும் ஐம்பாற்கும் உரியவிகுதிகள் புணர்ந்தால் எதிர்மறைச் சிறப்புவினை முற்றாம்.

(உ-ம்.) அவன் இலன், அவள் இலள், அவர் இலர், அது இன்று, அவை இல; நான் இலேன், நாம் இலோம்; நீ இலாய், நீர் இலீர் எனவரும்

258. குறிப்பில் இன்மையும் அன்மையும் என எதிர்மறை இருவகைப்படும்.

259. இன்மை இல்லாமையைச் சொல்லுதல் அன்மை ஒருபொருளை மறுத்து அதற்கினமானதைச் சொல்லுதல்.

(உ-ம்.) அது இல்லை, அது அன்று எனவரும்.

260. அல், இல், என்னும் எதிர்மறைப்பண்படிகள் ஆகாரச்சாரியை இடையிற் பெற்று, மல், மை, மே, து, இவ்விகுதிகளைப் புணர்ந்தும், சாரியை இல்லாமல் றிவ்விகுதியைப்புணர்ந்தும் வந்தால், எதிர்மறைக்குறிப்பு வினையெச்சங்களாம்.

(உ-ம்) அல்லாமல், இல்லாமல், அல்லாமை, இல்லாமை, அல்லாமே, இல்லாமே, அல்லாது, இல்லாது, அன்றி, இன்றி, வந்தான் எனவரும்.

261, அல், இல், என்பவை இடையில் ஆகாரச் சாரியையும், தகரவொற்று எழுத்துப்பேறும் பெற்று, அதன்மேல் அகர விகுதியைப் புணரின் எதிர்மறைப் பெயரெச்சமாம்.

(உ-ம்.) அல்லாத, இல்லாத

262. நட, முதலிய பகுதிகள் எதிர்மறை ஆகார விகுதிபெற்று, யாவும் ஒரு பகுதியாய் நின்று மல், மே, து, விகுதிகளைப் புணர்ந்தால் எதிர்மறைத் தெரிநிலை வினையெச்சமாம்.

(உ-ம்.) நடவாமல், நடவாமே, நடவாதுவந்தான்.

263. நட, முதலியபகுதிகள் எதிர்மறையாகார விகுதியைப் பெற்று, இரண்டும் ஒருபகுதியாகித் தகரவெழுத்துப் பேற்றோடு சேர்ந்த அகரவிகுதியைப் புணர்ந்தால் எதிர்மறைத் தெரிநிலைப் பெயரெச்சமாம்

(உ-ம்.) நடவாதகுதிரை எனவரும்.

264. எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சமும், எதிர்மறைத் தெரிநிலைப் பெயரெச்சமும், எழுத்துப் பேற்ருடு அகரவிகுதி குன்றியும் வரும்.

(உ-ம்.) இல்லாக்குதிரை, உண்ணக்குதிரை எனவரும்.

265. ஒரு எழுவாயோடு இரண்டு வினைமுற்று இயைந்தால் முதலில் இருக்கும் வினைமுற்றை வினையெச்சமாக்கிக்கொள்க.

(உ-ம்.) சாத்தன் உண்டான் போனான்=சாத்தன் உண்டு போனான்.

266. நடந்தான், முதலிய உடன்பாட்டு வினைமுற்று எதிர்மறைக் குறிப்புப் பொதுவினை முற்ருடாயினும் எதிர்மறைக் குறிப்புச் சிறப்பு வினைமுற்ருடாயினும் சேர்ந்தால் எதிர்மறையையே காட்டும்.

(உ-ம்.) நடந்தானில்லை, நடந்தானிலன்; நடந்தாயில்லை, நடந்தாயிலாய்; எனவரும்.

267. நடந்து என்னும் வினையெச்சத்தோடும், நடக்கின்று என்னும் நிகழ்கால இடைநிலையோடு சேர்ந்த பகுதியோடும், நடக்குஎன்னும் குச்சாரியை சேர்ந்த பகுதியோடும், எதிர்மறைக் குறிப்புச் சிறப்பு வினைமுற்றுச் சேர்ந்து முக்காலத்தையுங் காட்டும்.

(உ-ம்.) நடந்திலன், நடக்கின்றிலன், நடக்கிலன் எனவரும்.

வினையியல் முற்றிற்று.

## பொதுவியல்.

---

268. இருதிணையிலும் ஆண்பால் பெண்பால்களுக்குப் பொதுவாகிய பெயர்ச்சொற்களும் அப்படிப்பட்ட வினைச்சொற்களும், ஆண்பால் பெண்பால்களுள் ஒன்றைக் குறிப்பால் ஒழிக்கும்.

(உ-ம்.) ஆயிரமக்கள் போர்செய்யப் போயினர்—இதில் மக்களென்னும் உயர்திணை இருபாலுக்குமுரியபொதுப் பெயரும், போயினர் என்னும் பொது வினையும் போர் செய்ய என்னுங் குறிப்பினுல் பெண்பாலை யொழித்தன.

பெருந்தேவி கருவுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்களுளர்:—இதில் மக்கள் என்னும் பொதுப்பெயரும், உளர் என்னும் பொது வினையும், கருவுயிர்த்த என்னும் குறிப்பினுல் உயர்திணை யாண்பாலை யொழித்தன.

269. திணைபாலிடங்களுக்குப் பொதுவாகிய பெயர்வினைகளினுடைய பொதுத் தன்மையை மேலே வருகிற சிறப்புப்பெயரும் சிறப்புவினையும் நீக்கும்.

(உ-ம்.) சாத்தன் இவன், சாத்தன் இது. சாத்தன் வந்தான், சாத்தன் வந்தது எனவும்; ஒருவர் என் தாயார், ஒருவர் என் தகப்பனர் எனவும்; மரம்

வளர்ந்தது, மரம் வளர்ந்தன எனவும்; பெயரின் திணைப்பொதுமையையும், பாற்பொதுமையையும் சிறப்புப் பெயர்வினைகள் வந்து நீக்கின.

அவரெல்லாம் இருந்தார், அவையெல்லா மிருந்தன, யாமெல்லாம் வருவோம், நீரெல்லாம் போமின், எனப்பெயரின் திணைப்பொதுமையையும், இடப்பொதுமையையும், சிறப்புப் பெயர் வினைகள் வந்து நீக்கின.

வாழ்க அவன், அவள், அவர், அது, அவை, யான், யாம், நீ, நீர், என வினையின் திணைபால் இடப்பொதுமையினைச் சிறப்புப் பெயர்கள் வந்து நீக்கின. மற்றவைகளையும் சிறப்புச் சொல்லோடு சேர்த்துக்காண்க.

270. பெயரிலும், வினையிலும், ரகரவீற்றுச்சொல்லின் அயலிலிருக்கும் ஆகாரம், ஓகாரமாம்.

(உ-ம்.) நல்லார், நல்லோர் எனவும், கொண்டார் கொண்டோர் எனவும் வருதல் காண்க.

271. செய்யுளில் ன, ள, ய, ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாகும்.

(உ-ம்.) வந்தான், வந்தோன்; செய்தான், செய்தோன்; வந்தாய், வந்தோய், எனவரும்.

272. வேற்றுமையுருபுகள் பல வடுக்கிவந்தாலும், வேறுபல அடுக்கிவந்தாலும், வினைவேறுபலவடுக்கிவ

ந்தாலும்,இறுதியில் ஒருமுடிக்குஞ்சொல்லைக்கொண்டு முடியும்.

(உ-ம்.)அரசன்பகைவனை வாளால்வெட்டினான், உருபுபலவடுக்கி ஒருமுடிக்குஞ்சொல்லைக்கொண்டது. சாத்தனையுங்கொற்றனையும்வாழ்த்தினான், சாத்தனுக்குங்கொற்றனுக்குந் தந்தை என ஐயுருபுங்குவ்வுருபும் வேறுபலவடுக்கிஒருமுடிக்குஞ் சொல்லைக்கொண்டன. வாள்கைக்கொண்டான், அருளற முடையான்என உருபுகள்தொக்குஅவ்வாறுவந்தன.

ஆடினான் பாடினான் சாத்தன், ஆடிஓடிவந்தான், கற்றகேட்ட பெரியோர்என வினைமுற்றும்வினையெச்சமும் பெயரெச்சமும் வேறுபலவடுக்கி ஒருமுடிக்குஞ்சொல்லைக்கொண்டன.

273. வேற்றுமை யுருபுகளும், வினைமுற்றுகளும் பெயரெச்ச வினையெச்சங்களுமாகிய இவைகளுக்கும் இவற்றைமுடிக்குஞ் சொல்லாகியபெயர் வினைகளுக்கும் நடுவில் அவ்விடத்துக்குப் பொருந்துவனவாகியவேறு சொற்கள் வருதலுமுண்டு. அவற்றிற்கு இடைப்பிறவரலென்று பெயர்.

(உ-ம்.)சாத்தன் வயிறாரவுண்டான்; அறத்தை அழகுபெறச்செய்தான்; இவைகளில் வயிறார; அழகுபெறஎன்பனஇடைப்பிறவரலாம்:வந்தானவ்வூருக்குப்போன

சாத்தன், வந்தவடகாசி மன்னன், வந்துஅவனூருக்குப்போனான்; இவைகளும்அப்படியே.

274. வினைமுற்றும் வினையெச்சமும்; முடிக்குஞ்சொல்லுக்கு முதலில் நிற்பதுமல்லாமல்ஈற்றிலும்நிற்கும்.

(உ-ம்.)வந்தான் சாத்தன், என்பது சாத்தன்வந்தான் எ-ம்; வந்துபோனான் என்பது போனான் வந்து எ-ம், வரும்.

275. ஐயுருபு ஒன்றும், முடிக்குஞ்சொல்லின் ஈற்றில் தொகும்.

(உ-ம்.) சட்டினான் வீடு. வெட்டினான் மரம் என வரும்.

276. ஏதாவது ஒருசொல் வினைகொண்டு முடியும் போது அதனினத்தையுந் தெரிவிக்கும்.

(உ-ம்.) சோறுண்டான் என்பது கறி முதலியவைகளையும் உண்டான் என்று தன் இனத்தையுந் தழுவியது.

நஞ்சுண்டவன் சாவான்; இதில் நஞ்சுண்டவன் என்னும் உயர்திணை ஆண்பாற்பெயர், நஞ்சுண்டவள், நஞ்சுண்டவர், நஞ்சுண்டது, நஞ்சுண்டன என்னும் உயர்திணைப் பெண்பால், பலர்பால், அஃ

றிணை யொன்றன்பால், பலவின்பால் இவைக ளையுந் தழுவியது.

277. பெயரெச்சம் வினையெச்சம், உம்மையெச்சம் சொல்லெச்சம், பிரிநிலையெச்சம், எனவெச்சம், ஒழி யிசையெச்சம். எதிர்மறையெச்சம், இசையெச்சம், குறிப்பெச்சம், என்கிறபத்துவகை யெச்சமும் தம் எச்சமாகிய பெயர்வினைகளைக் கொண்டு முடியும்.

(உ-ம்.) செய்தசாத்தன் என்னும் பெயரெச்சம் தன் னெச்சமாகிய பெயரைக்கொண்டது.

செய்து வந்தான் என்னும் வினையெச்சம், தன்னெ ச்சமாகிய வினையைக்கொண்டது.

சாத்தனும் வந்தான் என்னும் உம்மையெச்சம்.முன் னே கொற்றன் வந்ததல்லாமல் என்கிற தன்னெ ச்சமாகிய சில சொற்களைக்கொண்டது.

நல்லவனென்றான் என்னும் சொல்லெச்சம், நல்ல வனென்று சொன்னான் எனச்சொல்லென்னுந் தன்னெச்சங்கொண்டது.

சாத்தனே கொண்டான் என்னும் பிரிநிலை யெச்சம் பிறர் கொள்ளவில்லை யெனத்தன்னெச்சங் கொ ண்டது.

கடல் ஒல்லென ஒலித்தது என்னும் எனவெச்சம், தன்னெச்சமாகிய மிகவும் ஒலித்தது என்னும் வினையைக்கொண்டது.

கூரியவாள்காண், உண்ணுதற்கோ வந்தான் என்னும் ஒழியிசை யெச்சம், முறையே இப்போது ஒடிந்துவிட்டது, கலகஞ் செய்யவந்தான் எனத் தம்மெச்சங்கொண்டன.

யானோ செய்தேன், வருதற்கு முரியன் என்பன எதிர்மறையெச்சம்; இவை முறையே யான் செய்திலன், வராமைக்கு முரியன் எனத் தம்மெச்சங் கொண்டன.

கற்றதனாலாயபயனென்கொல், இந்தஇசையெச்சம் ஒருவன் பலநூல்களைநிரம்பக் கற்றதனால் என்று பொருள் படுதலால் எஞ்சிநின்ற இப்பலசொற்களைக்கொண்டது.

கல்லைக்கடிக்க நன்றாய்ச்சமைத்தாய் என்கிற குறிப்பெச்சம் நன்றாய்ச் சமைக்கவில்லையெனத்தன்னெச்சங்கொண்டது.

279. வேற்றுமைத் தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை அன்மொழித்தொகை, எனத்தொகைநிலைத்தொடர்மொழிகள் அறுவகைப்படும்.

280. ஐ முதலிய ஆறுருபும் வெளிப்படாமல் தொக்க தொடர் மொழிகள் வேற்றுமைத் தொகையாம்.

(உ-ம்.) நிலங்கடந்தான் - இரண்டாம் வேற்றுமைத் தொகை: கல்லெறிந்தான் - மூன்றும்வேற்றுமை

த்தொகை; சாத்தன்மகன் -நான்காம் வேற்றுமைத்தொகை; ஊர் நீங்கினான் – ஐந்தாம்வேற்றுமைத்தொகை; சாத்தன்கை – ஆறாம்வேற்றுமைத்தொகை; காட்டுப்புலி – ஏழாம்வேற்றுமைத்தொகை.

281, காலங்காட்டும் இடைநிலையும் பெயரெச்சவிகுதியும் ஒழியப் பகுதியளவாய் நின்று பெயரை, அவாவிநிற்பது வினைத்தொகையாம்.

(உ-ம்.) கொல்யானை, விடுகணை; நேற்றுவிடுகணை-இறந்தகால வினைத்தொகை, இன்று விடுகணை நிகழ்கால வினைத்தொகை, நாளை விடுகணை- எதிர்காலவினைத்தொகை விட்ட, விடுகிற, விடும் என்று விரியும்.

போ, கா, மோ என்னும் பகுதியையுடைய பெயரெச்சங்கள் ஈறுகெட்டு வினைத் தொகையாகா.

சா, ஈ, இவைமாத்திரம் சா நாள்; ஈ பொருள் என வினைத்தொகையாம்; தா, வா, தரு, வரு என்றும், நட ,இற, நடந்திடு, இறந்திடு, என்றும் விகாரப்பட்டு வினைத்தொகையாம்.

282. வினைத்தொகை, செய்பொருளின்மைக்கும், செய்பொருளுண்மைக்கும் பொதுவாகிய பகுதியில் செய்பொருள் இல்வினைக்கே பெரும் பான்மைவரும்.

(உ-ம்.) இடி, அறு, சளா இவற்றோடு சுவர், கயிறு, பொருள் என்பவற்றைக் கூட்டுக, இடிந்த, இடி

கின்ற, இடியும் எனவருமேயன்றி, இடித்த, இடிக்கின்ற இடிக்தும் எனவராமை காண்க.

உளாகல், கஊாகல் என்பவை வழக்கில் செய்பொருளில் வரும்.

283. பண்புக்கும், பண்பிக்கும், நடுவே அவற்றிற்கு உண்டாயிருக்கின்ற ஒற்றுமை நயத்தை விளக்கும் ஆகிய வென்னும் பண்புருபுதொக்கது பண்புத்தொகையாம்.

284. அது, வண்ணம், வடிவு, அளவு சுவை இவைகளால் நான்கு வகைப்படும்.

(உ-ம்.) செந்தாமரை... வண்ணப்பண்புத்தொகை.
வட்டக்கல் ... ... ... வடிவுப்பண்புத்தொகை.
ஒருபொருள் ... ... ... அளவுப்பண்புத்தொகை
துவர்க்காய் ... ... ... சுவைப்பண்புத்தொகை.
முறையேசெம்மையாகிய, ஒன்றாகியஎனவிரியும்.

285. ஒரு பொருளுக் குண்டா யிருக்கிற பொதுப் பெயருக்கும் சிறப்புப் பெயருக்கும் நடுவில் ஆகிய வென்னும் உருபுதொக்க தொடர் இருபெயரொட்டுப் பண்புத் தொகையாம்.

(உ-ம்.) சாரைப்பாம்பு, ஆயன் சாத்தன்.

286. வினை, பயன், மெய், உருபு, இவைகளைப் பற்றிவரும் உவமையுருபு தொக்க தொடர்மொழி உவமைத் தொகையாம்.

(உ-ம்.) குருவிகூப்பிட்டான் வினையுவமைத்தொகை
சற்பகக்கையான் ... ... பயனுவமைத்தொகை.
உடுக்கையிடை ... ... ... மெய்யுவமைத்தொகை.
பவளவாய் ... ... ... ... உருபுவமைத்தொகை.

போல், நேர். நிகர் முதலியவை உவமையுருபுகளாம்.

(உ-ம்.) குருவிபோலக் கூட்பிட்டான்.

கற்பகப்போலுங் கையான் எனவிரியும்.

287. இடையிலும் ஈடையிலும் உம்மைதொக்க சொற்களின் தொடர், உம்மைத்தொகையாம்.

அது, எண்ணலளவை, எடுத்தலளவை, முகத்தலளவை, நீட்டலளவை, இவற்றால் நான்குவகைப்படும்.

(உ-ம்.) ஒன்றேகால்......எண்ணலளவை
சழஞ்சேகால் ......... எடுத்தலளவை
கலனே தூணி ......... முகத்தலளவை
சாணங்குலம் ......... நீட்டலளவை
} உம்மைத் தொகை.

ஒன்றுங்காலும், கழஞ்சுங்சாலும், கலனுந்தூணியும், சாணும் அங்குலமும் எனவிரியும்.

288. வேற்றுமைத் தொகை முதலாகிய ஐவகைத் தொகைக்கும், புறத்தில் வேறுமொழி தொக்கு வருவது அன்மொழித் தொகையாம்.

(உ-ம்.) பூங்குழல்—இரண்டாம் வேற்றுமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை.

தாழ்குழல்—வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

கருங்குழல்—பண்புத்தொகைப் புறத்துப்பிறந்தஅன்மொழித்தொகை.

துடியிடை—உவமைத்தொகைப்புறத்துபிறந்தஅன்மொழித்தொகை.

உயிர்மெய்—உம்மைத்தொகைப் புறத்துப்பிறந்தஅன்மொழித்தொகை.

இவைமுறையே பூவைமுடித்த குழலையுடையாள்; தாழ்ந்தகுழலினையுடையாள்: கருமையாகிய குழலையுடையாள்; துடிபோலும்இடையையுடையாள், உயிரும்மெய்யுங் கூடிப்பிறந்த எழுத்தென விரியும்.

289. முன்மொழியும், பின்மொழியும், பன்மொழியும், புறமொழியும் என்கிற நான்கிடங்களிலும் தொகை நிலைத்தொடர் பொருள் சிறந்து நிற்கும்.

(உ-ம்.) வேங்கைப்பூ, செந்தாமரை —முன்மொழி
யிற் பொருள் சிறந்தன.

கண்ணிமை, வெண்மதி —பின்மொழியிற் பொருள்
சிறந்தன.

பாக்குவெற்றிலை, சேரசோழபாண்டியர் —பன்மொ
ழியிற் பொருள் சிறந்தன.

தேன்மொழி, கருங்குழல் —இவற்றை உடைய பெ
ண் என்கிற புறமொழியிற் பொருள் சிறந்தன.

290. உயர்திணைஒருமையில் வருகிற உம்மைத்தொ
கை, ரவ்வொற்றும் கள்ளீறுமாகிய பலர்பால் விகுதி
யை உடையதாம்.

(உ-ம்.) சேரசோழபாண்டியர், தேவன் தேவிகள்
எனவரும்.

291. அஃறிணை ஒருமையினும் திணைப்பொது ஒரு
மையினும் வருகிற உம்மைத்தொகை பன்மை விகுதி
பெற்றும் பெறாதும் வரும்.

(உ-ம்.) ஆடுமாடுகள், ஆடுமாடு எ-ம், தாய்தந்தை
யர், தாய் தந்தை எ-ம், வரும்.

292. வேற்றுமை யுருபுகள் தொக்கு நின்ற வழி
பொருள்களினுலே மயங்குந் தன்மையையுடைய
தொடர் மொழிகள் இரண்டு முதல் ஏழீருகிய பொரு
ள்களால் மயங்கும்.

(உ-ம்.) தெய்வவணக்கம் என்பது தெய்வத்தை வணங்குகின்ற வணக்கம், தெய்வத்துக்கு வணக்கம் என இருபொருளாலே மயங்கியது.

நீர்மோர் என்பது நீருடையமோர், நீரோடு கூடிய மோர், நீருமோரும் எனமூன்று பொருள்களாலேமயங்கியது.

சொல்லிலக்கணம் என்பது சொல்லினதிலக்கணம், சொற்கிலக்கணம், சொல்லில் இலக்கணம், சொல்லிலக்கணஞ் சொன்னநூல் என நான்குபொருள்களாலே மயங்கியது.

பொன்மணி என்பது பொன்னலாகியமணி, பொன்னுகியமணி, பொன்னின்கண்மணி, பொன்னோடு சேர்ந்தமணி, பொன்னும் மணியும் என ஐந்துபொருள் களாலே மயங்கியது.

மரவேலி என்பது மரத்தைக்காக்கிற வேலி, மரத்துக்கு வேலி, மரத்தினது வேலி, மரத்தின் புறத்து வேலி, மரத்தாலாகிய வேலி, மரமாகிய வேலி என ஆறுபொருள்களாலே மயங்கியது.

சொற்பொருள் என்பது சொல்லால் அறியப்படுகிற பொருள், சொல்லினது பொருள், சொல்லுக்குப் பொருள், சொல்லின்கண்பொருள், சொல்லு

ம் பொருளும், சொல்லாகியபொருள், சொல்லானது பொருள் என ஏழுபொருள்களாலே மயங்கியது.

293. வினைமுற்று, பெயரொச்சம், வினையெச்சம், எழுவாய், விளி, வேற்றுமை யுருபுகள் விரிந்து நிற்கும் புணர்ச்சி, இடைச்சொற் புணர்ச்சி, உரிச்சொற் புணர்ச்சி, அடுக்குப் புணர்ச்சி, இவ்வொன்பதும் தொகாநிலைத்தொடர் மொழிகளாம்.

(உ-ம்.) உண்டான்சாத்தன், உண்டசாத்தன், உண்டு வந்தான், சாத்தன்வந்தான், கொற்றகொள், குடத்தைச்செய்தான், மற்றென்று, நனிபேதை பாம்பு பாம்பு எனவரும்.

294. திணையும், பாலும், இடமும், காலமும், வினவும், விடையும், மரபும், ஆகிய இவை மயங்கிவந்தால் வழுவாம்.

(உ-ம்.) அவன் வந்தது.................. திணைவழு.
அவன் வந்தாள்......................... பால்வழு.
யான் வந்தான்......................... இடவழு.
நாளை வந்தான்......................... காலவழு
ஒரு விரலைக்காட்டிச் சிறிதோ பெரிதோ என்பது.......... } வினவழு.

| | |
|---|---|
| தில்லைச்கு வழியாதென்றவனுக்குச் சிவப்புக்காளை முப்பது பணம் என்பது........................... | விடைவழு |
| யானை மேய்ப்பானை இடையன் என் பது................................ | மரபுவழு. |

295. திணை ஐயத்தையும், பால் ஐயத்தையும், அதன் அதன் பொதுச்சொல்லாலும், துணிந்த பொருளின் மேல் அல்லாத தன்மையைவைத்தும் சொல்வார்கள்.

(உ-ம்.) குற்றியோ மகனோ அவ்விடத்தே தோன்றுகிற உரு எனத் திணையில் ஐயம் வந்தபோது உரு என்கிற பொதுச்சொல்லாலும்; ஆண்மகனோ பெண்மகளோ அங்கே தோன்றுகின்றவர் எனப் பாலில் ஐயம் வந்தபோது, தோன்றுகின்றவர் என்கிற பொதுச் சொல்லாலும் சொல்லுக.

இனித் துணிந்தபொருள், குற்றியாயின் மகனன்று மகனாயின் குற்றியல்லன் எ-ம், ஆண்மகனெனில் பெண்மகளல்லள், பெண்மகளெனின் ஆண்மகனல்லன் எ-ம், ஒன்றெனிற் பலவன்று, பலவெனின் ஒன்றல்ல எ-ம், சொல்லுக.

296. வேறொருவகை துணிந்த பொருள்மேல் அன்மையை வைத்துச் சொல்லாமல் திணைப்பொதுச் சொல்லுக்கும் பாற்பொதுச் சொல்லுக்கும் பயனிலையாக அப்பொருளின் பெயரைக் கூறுதலுங்குற்றமன்று

(உ-ம்.) குற்றி, மகன், ஆண்மகன், பெண்மகள் எனக்கூறுக.

297. பாலும், திணையும், மகிழ்ச்சி, உயர்வு, சிறப்பு, கோபம், பழிப்பு, ஆகிய இவைகளால் வழுவிவந்தாலும், குற்றமில்லை.

(உ-ம்.) தன்மகனை "என்னம்மை வந்தாள்" என்பது, மகிழ்ச்சியினால் ஆண்பால் பெண்பாலாயிற்று.

ஒருவனை அவர்வந்தார் என்பது, உயர்வினால் ஒருமைப்பால் பன்மைப் பாலாயிற்று.

தாதா உலகுக்கோர்தாயே என்பது சிறப்பினால் ஆண்பால் பெண்பாலாயிற்று.

கைசயடிபெறவீர் காணீயரோ—இது ஒருவனைப் பார்த்துச் சொல்லியபடியால், கோபத்தால் ஒருமைப்பால் பன்மைப்பாலாயிற்று.

பெண்புத்தி கேட்பானை இவன் பெண் என்பது, பழிப்பினால் ஆண்பால் பெண்பாலாயிற்று.

ஒருபசுவை என்னம்மை வந்தாள் என்பது மகிழ்ச்சியால் அஃறிணை உயர்திணையாயிற்று.

இனியாரோ என்பது, உயர்வினால் அஃறிணை உயர்திணையாயிற்று.

என்பிள்ளைகளே என்பொருள் என்பது, சிறப்பினால் உயர்திணை அஃறிணையாயிற்று.

ஒருவர் சொல்லுங் கேளான், தானும் அறிந்து கொள்ளான், அவ்வுயிரால் யாது பயன் என்பது கோபத்தால் உயர்திணை அஃறிணையாயிற்று.

நாம் அரன் உடைமை என்பது, பழிப்பினால் உயர்திணை யஃறிணையாயிற்று.

298. ஒருமைப்பாலில் டன்மைப்பாற்சொல்லையும் பன்மைப்பாலில் ஒருமைப்பாற் சொல்லையும், ஓரிடத்தில்பிற இடச்சொல்லையும், தழுவிக்கூறுதலும் உண்டு.

(உ-ம்.) வெயிலெல்லாமறைத்தது மேகம், இரண்டு கண்ணுஞ் சிவந்தது என்பன ஒருமையில் பன்மையும், பன்மையில் ஒருமையும் வந்தன.

சாத்தன் தாய் இங்ஙனஞ் செய்வேனோ—சாத்தன் தாய் என்னும் படர்க்கை செய்வேனோ என்னுந் தன்மையின் வினையைத் தழுவியது.

299, இறப்பு, எதிர்வு, நிகழ்வு, எனக் காலம் மூன்றுவகைப்படும்.

300. மூன்று காலத்திலும், தொழிலிடையறாமல் நடக்கின்ற பொருளை நிகழ்காலத்தாற் சொல்லவேண்டும்.

(உ-ம்.) தெய்வமிருக்கிறது, ஆறொழுகுகிறது, அரசன்ஆளுகிறான் எனவரும்.

301. வினாவினாலும், மிகுதியினாலும், தெளிவினாலும், இயல்பினாலும், எதிர்கால நிகழ்காலங்கள் இறந்தகாலமாகவும்' எதிர்காலம் இறந்தகால நிகழ்காலங்களாகவும், இறந்தகாலம் எதிர்கால நிகழ்காலங்களாகவும் வரும்.

(உ-ம்.)

இனி உண்ணப்போகும் ஒருவனை, உடன்கொண்டு போகவிரும்பிய மற்றொருவன் பார்த்து, இன்னும் உண்டிலையோ? என்றால், உண்டேன் உண்டேன் என்று சொல்லுவதும், உண்கிறவன் அப்படிச் சொல்வதும் வழக்கம் ஆதலால், எதிர்காலமும் நிகழ்காலமும் இறந்தகாலமாயின; இது வினாவு.

நீ அவனுடனே பகைத்தால் செத்தாய், சாகிறாய்; இந்தக்காட்டில் போனால் துணியிழந்தாய், இழக்கிறாய் என எதிர்காலம் இறந்தகாலமும் நிகழ்காலமுமாயிற்று; சாதலும் துணி இழத்தலும் தப்பினாலும் தப்பும், ஆதலால், இது மிகுதியென்று சொல்லப்பட்டது.

அறஞ்செய்தால் சுவர்க்கம் புகுந்தான், புகுகிறுன்; எறும்பு முட்டைகொண்டு திட்டை ஏறினல் மழைபெய்தது, பெய்கிறது, தெளிவினுல் எதிர் காலம் இறந்தகாலமும் நிகழ்காலமுமாயிற்று.

யாம் பண்டு விளையாடுவது இச்சோலை, விளையாடுகிறது இச்சோலை, இயல்பினுல் இறந்தகாலம் எதிர் காலமும், நிகழ்காலமுமாயிற்று.

302. அறிவு, அறியாமை; ஐயம், கொளல், கொடை ஏவல் என வினு அறுவகைப்படும்.

(உ-ம்.)

ஆசிரியன் மாணுக்கனை இப்பாட்டுக்குப் பொருளென்ன என்பது.......... } அறிவினு.

அப்படி மாணுக்கன் ஆசிரியனைக்கேட்பது அறியாவினு

குற்றியோ மகனே என்பது................ஐயவினு.

பயறுண்டோ செட்டியாரே என்பது ... கொளல்வினு.

உனக்கு ஆடையில்லையோ என்பது ... கொடைவினு.

சாத்தா உண்டிலேயோ என்பது ..........ஏவல்வினு

303. சுட்டு, மறை, நேர், ஏவல், வினுதல், உற்றதுரைத்தல், உறுவதுகூறல், இனமொழி என விடை எட்டுவகைப்படும்.

(உ-ம்.)

இல்லைக்கு வழியாதெனின், இது என்பது சுட்டுவிடை.

சாத்தா இது செய்வாயா என்றவனுக்கு, செய்யேனென்பது ........... } மறைவிடை.

செய்வேன் என்பது ....................... நேர்விடை.

நீ செய் என்பது ......................... ஏவல்விடை.

செய்வேனோ என்பது .................... வினாவிடை.

தலைநொத்தது, நோகிறது என்பன உற்றதுகூறல்விடை

தலைநோகும் என்பது ......... உறுவதுகூறல்விடை.

மற்றொன்று செய்வேன் என்பது.........இனவிடை.

304. எந்தப்பொருளை எந்தச்சொல்லால் பெரியோர்கள் சொன்னார்களோ அப்படியே நாமும் சொல்லுதல் மரபாம்.

(உ-ம்.) பசுவின்கன்று, குதிரைக்குட்டி, அணிற்பிள்ளை, கிளிப்பிள்ளை என்பன மரபாம், பசுவின்குட்டி, குதிரைக்கன்று, அணிற்குட்டி கிளிக்குஞ்சு என்பன குற்றமாம்.

305. எழுத்தின் தன்மை திரியாமல் பொருள் வேறுபட்ட தொடர்சொற்கள், குறித்த சொல்லின் இறுதியும் முதலுந்தோன்ற, இசையறுத்துச் சொல்லுகிற வேறுபாட்டால் துணிவுண்டாகும்.

(உ-ம்.) குறும்பரம்பு, செம்பொன்பதின் கழஞ்சு இவற்றை குறும் பரம்பு, குறும் பரம்பு எனவும், செம்பொன் பதின்கழஞ்சு, செம் பொன் பதின் கழஞ்சு எனவும், இசையறுத்து உச்சரிக்க.

306. சுட்டுப்பெயர் வாக்கியத்திற்குப் பின்னே வரும்.

(உ-ம்.) நம்பிவந்தான் அவனுக்குச்சோறிடு; எருது வந்தது அதற்குப் புல்லிடு எனவரும். மற்றைத் திணை பால்களிலும் இவ்வாறே காண்க.

307 விரைவு, சினம், உவகை, அச்சம், அவலம், மிகுதி இப்பொருள்களைப்பற்றிச் சொற்கள் அடுக்காக இரட்டும்.

(உ-ம்.) போ போ ... ... ... ... ...விரைவு.
எறி எறி ... ... ... ... ... சினம்.
வருக வருக ... ... ... ... ... உவகை.
பாம்பு பாம்பு ... ... ... ... அச்சம்.
வாழேன் வாழேன் ................அவலம்.
வந்து வந்து போனான் ............. மிகுதி

308. இவ்வளவென்று அறிந்த பொருளையும், எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளையும், வினையோடு கூட்டிச் சொல்லும்போது முற்றும்மை வேண்டும்.

(உ-ம்.) தமிழ் நாட்டு மூவரசரும் வந்தார், இறைவ னுக்குக் கண்மூன்று முச்சுடர், எ-ம், முயற்கோடு ஆகாயப்பூ, என்றுமில்லை, எங்கும் இல்லை எ-ம் வரும்.

309. செயப்படுபொருளை வினைமுதல் போல் வைத்து அதன்மேல் வினைமுதல் வினையைச் சொல்லுத லே வழக்கத்தில் பெரும்பான்மை.

(உ-ம்.) இம்மாடு யான் கொண்டது.
இச்சோறு யான் கொடுத்தது.

310. கருவி, நிலம், செயல், காலங்களையும், வினை முதல்போல் வைத்துக் கூறுதலும் உண்டு.

(உ-ம்.) இவ்வெழுத்தாணி யானெழுதியது.
இவ்வீடு யானிருந்தது.
இத்தொழில் யான்செய்தது.
இந்நாள் யான் பிறந்தது எனவரும்.

311. பொருள் முதலாகிய ஆறினையும் அடையாகப் பெற்றுவருகிற சொற்கள் இனமுள்ளனவாயிருப்ப தும் அன்றி, இனம் இல்லாதனவுமாம்.

(உ-ம்,)

| இனமுள்ளன | இனமில்லாதன | |
|---|---|---|
| செய்க்குடம் | உப்பளம் | பொருள். |

| | | |
|---|---|---|
| குளநெல் | ஊர்ச்சவை | இடம். |
| கார்த்திகைவிளக்கு | நாளரும்பு | காலம். |
| பூமரம் | இலைமரம் | சினை. |
| செந்தாமரை | வெண்மதி | குணம். |
| ஊதுகொம்பு | தோய்தயிர் | தொழில். |

312. ஓர் அடையும், ஓர் சினையும், ஓர் முதலையடுத்து ஒன்றை ஒன்று விசேடித்து வருதலும், இரண்டடை முதலை விசேடித்து வருதலும் உளவாம்.

(உ-ம்.) வேற்கைமுருகன், செங்கால்நாரை, பெருவெள்ளை அரிசி, சிறு கருங்காக்கை எனவரும்.

பொதுவியல் முற்றிற்று.

---

## இடையியல்.

---

313. இடைச்சொல் பெயர்வினைகளைப் போலத்தனித்துவராமல் அவைகளைச் சார்ந்து பொருளையுணர்த்தி வருஞ் சொற்களாம்.

314. ஐம்முதலிய வேற்றுமை உருபுகளும் அன், ஆன் முதலிய விகுதிகளும், சாரியைகளும், சுட்டும், வினாவும், பிறவழியால் வருவனவும், இடைச்சொற்களாம்.

315. ஏகாரம் தேற்றத்திலும், பிரிநிலையிலும், வினாவிலும், ஈற்றசையிலும், வரும்.

(உ-ம்.) கடவுளே உயர்ந்தவர் ... ... தேற்றம்.
அவனேகொண்டான் ... ... பிரிநிலை.
நீயேகொண்டாய் ... ... ... வினா.
வருத்தனர்கொளலே ... ... ஈற்றசை.

316. ஓகாரம், ஐயத்திலும், எதிர்மறையிலும், வினாவிலும், சிறப்பிலும். வரும்.

(உ-ம்.) குற்றியோமகனோ ... ... ... ஐயம்.
அவனோகொண்டான் ... ... எதிர்மறை.
பசுவோவந்தது ... ... ... ... வினா.
ஓஒ பெரியன் ... ... ...உயர்வுசிறப்பு.
ஓஒ கொடியன் ... ... இழிவுசிறப்பு.

317. உம்மை எதிர்மறையிலும், சிறப்பிலும், ஐயத்திலும், எச்சத்திலும், முற்றிலும், எண்ணிலும், வரும்.

(உ-ம்.) வருதற்குமுரியன் ... ... எதிர்மறை.
குறவருமருளுங்குன்று ... உயர்வுசிறப்பு.
புலைபறும்விரும்பாதயாக்கை இழிவுசிறப்பு
பத்தாயினும் எட்டாயினும்கொடு ஐயம்.
சாத்தனும் வந்தான் ... ... எச்சம்.
எல்லாரும் வந்தார் ... ... முற்று.
சாத்தனும் கொற்றனும் வந்தார் ... எண்.

318. மற்று என்பது, பிறிதென்னும் பொருளில் வரும்.

(இ-ம்) அறஞ் செய்யத்தக்கது, மற்றது செய்யத்தகாதது.

319. பின், முன், என்பன காலப் பொருளையும் இடப்பொருளையும் தந்து ஏழாம்வேற்றுமைப்பொருளிலேயே வரும் இடைச்சொற்கள்.

(உ-ம்.) பின் பிறந்தான், முன் பிறந்தான் எ-ம், பின் உட்கார்ந்தான்; முன்உட்கார்ந்தான் எ-ம், வரும்

320. பின் என்பதொன்றும் மற்றென்னும் பொருளிலும் வரும்.

(உ-ம்.) அதையின்றிப் பின் எதைச்செய்வேன். பின் முன், என்பவை, பின்பு, முன்பு, பின்னை; முன்னை, பின்னர். முன்னர், எ-ம், மற்று, என்பது, மற்றை எ-ம், விகாரப்பட்டுவரும்.

இடையியல் முற்றிற்று.

---

## உரியியல்.

---

321. உரிச்சொல் என்பது குணத்தை யுணர்த்திப் பெயர்வினைகளுக்கு உரிமைபூண்டு செய்யுள் வழக்கத்தில் வழங்குஞ் சொல்லாம்.

(உ-ம்.) நனிபேதை, நனிதின்ருன்.

322. சால, உறு, தவ, நனி, கூர், கழி, என்பனமிகுதி என்னும் ஒருகுணத்தை யுணர்த்தும் உரிச்சொற்களாம்.

323. கடி என்பது காவல், கூர்மை, வாசனை, ஒளி, அச்சம், சிறப்பு, புதுமை, மிகுதி, விரைவு முதலிய பலகுணத்தை உணர்த்தும் உரிச்சொல்லாம்.

மற்றவைகளுமிப்படியே.

324. இதிற் சுருக்கச் சொல்லிய இலக்கணங்களையே ஏதுவாகக்கொண்டு சொல்லாது விட்ட மற்றவைகளையும் ஆராய்ந்தறிந்துகொள்க.

உரியியல் முற்றிற்று.

---

## சொற்ருெடரியல்.

---

325. சொற்ருெடர் ஆவது பெயர்முதலிய சொர்கள் ஒழுங்குபடத் தொடர்ந்து நிற்பது.

326. வாக்கிய மாவது எழுவாயும் பயனிலையும் செயப்படுபொருள் முதலியவைகளோடு கூடியேனுங்கூடாதேனும்முடிவுபெற்றுநிற்பது ஆம்.

327. எழுவா யாவது வாக்கியத்தின் முதற்பொருள் ஆம். எழுவாய் என்பது கர்த்தா

(உ-ம்.) பொன்னன் வந்தான் என்பதில், பொன்னன் என்பது வாக்கியத்தின் முதற்பொருளாகிய எழுவாயாம்.

328. பயனிலையாவது வாக்கியத்தின் முதற்பொருளின் செயலை காண்பிப்பது.

329. செயப்படுபொருளாவது வினைமுதற் றொழிற்பயன் உறுவது.

330. வாக்கியத்தில் எழுவாய் தொக்குவருவதும் உண்டு.

(உ-ம்.) வருகிறான்.

331. எழுவாயே அன்றி பயனிலை தொக்குவருவதும் உண்டு.

(உ-ம்.) நல்லவன் எவன்.

332. எழுவாய் ஒன்றும் பலவும் ஒரேபயனிலையையும் பல பயனிலைகளையும் கொள்ளும்; பலபயனிலைகளாகிய வினைகளில் கடைசி வினை மாத்திரம் முற்றுவினையாம்.

(உ-ம்) இவனும் அவனும் தோட்டத்தில் இருந்தார்கள் என்பதில் இரண்டு எழுவாயும் ஒரேபயனிலை கொண்டன.

அரசன் மந்திரியை அழைத்துக் காரியத்தைவிசாரித்து உத்தரவுசொன்னான் என்பதில் ஒரே எழுவாய் மூன்றுபயனிலைகளைக்கொண்டது.

333. பயனிலை எழுவாயோடு திணை, பால், இடம் ஆகிய இவைகளில் மாறுபடாமல்இசைந்து நிற்கும்.

| | | | | |
|---|---|---|---|---|
| (உ-ம்.) அவன் | ... | ... | ... | வந்தான். |
| அவள் ... | ... | ... | ... | வந்தாள். |
| அவர் | ... | ... | ... | வந்தார். |
| அது | ... | ... | ... | வந்தது. |
| அவை | ... | ... | ... | வந்தன. |
| நான் | ... | ... | ... | வந்தேன். |
| நாம் | ... | ... | ... | வந்தோம். |
| நீ | ... | ... | ... | வந்தாய் |
| நீர் | ... | ... | ... | வந்தீர் |

சொற்றொடரியல் முற்றிற்று.

---

## யாப்பிரியல்.

---

334. யாப்பென்பது பலவகைச் சொற்களால் உறுப்புகளை உடைத்தாகப் பாடப்படுவது.

யாப்பு, பாட்டு, பா, செய்யுள், தூக்கு, தொடர்பு, கவி, என்பன ஒரு பொருட் சொற்களாம்.

335. உறுப்பாவன, எழுத்து, அசை, சீர், தளை, அடி தொடை, இவ்வாறும் ஆம்.

336. எழுத்துகளாவன எழுத்திலக்கணத்தில் கூறிய முதலும் சார்பும் ஆகிய இருவகை எழுத்துக்களும் ஆம்.

337. அசை—நேர் அசை, நிரை அசை என இருவகைப்படும்.

(1.) குற்றெழுத்தும் நெட்டெழுத்தும் தனித்தாயினும் ஒற்றடுத்தாயினும் வரின் நேரசையாம்.

(உ-ம்.) நிலா என்பதில், நி-குறில் தனியே வந்த நேரசை.

லா-நெடில் தனியேவந்த நேரசை.

கொள் வான் என்பதில், கொள்-குறில் ஒற்றடுத்து வந்த நேரசை.

வான்—நெடில்ஒற்றடுத்துவந்த நேரிசை.

(2.) குறில் இணைந்தும் குறில் நெடில் இணைந்தும் இவை ஒற்றடுத்தும்வரின், நிரைஅசை ஆம்.

(உ-ம்.) பல புரு என்பதில், பல—குறில் இணைந்துவந்த நிரையசை.

புரு—குறில் நெடில் இணைந்துவந்த நிரையசை.

அணில் இருல் என்பதில், அணில்—குறில் இணைந்து ஒற்றடுத்து வந்த நிரையசை.

இருல்—குறில் நெடில் இணைந்து ஒற்றடுத்து வந்த நிரையசை.

(ஒற்று=மெய்)

338. சீராவது இருவகையசையும் சிறுபான்மை தனித்தும், பெரும்பாலும் இணைந்தும் வருவது ஆம்.

339. அச்சீர்—அசைச்சீர், இயற்சீர், உரிச்சீர்; பொதுச்சீர்; அல்லது ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைசீர், நாலசைச்சீர் என நான்காம்.

340. அவற்றுள் அசைச்சீர் அல்லது ஓரசைச்சீர் என்பது தனித்துவரும் நேரசையும் நிரையசையும் ஆகிய இரண்டுமாம்.

(உ-ம்.) நேரசைச்சீருக்குஉதாரணவாய்பாடு...நாள்
நிரையசைச்சீருக்குஉதாரணவாய்பாடு......மலர்

341. இவை பெரும்பாலும் வெண்பாவின் ஈற்றிலேவரும். அவற்றோடு முறையே குற்றிய லுகரஞ்சேர்ந்து; காசு எனவும், பிறப்பு எனவும் வருவதும் உண்டு.

342. இயற்சீர் அல்லது ஈரசைச்சீர் என்பது நேர் நேர், நிரை நேர், நிரை நிரை, நேர் நிரை, என நான்காம்.

இவற்றிற்கு உதாரணவாய்பாடு,

| | |
|---|---|
| நேர் நேர்=தே மா.<br>நிரை நேர்=புளி மா.<br>நிரை நிரை=கருவிளம்.<br>நேர் நிரை=கூ விளம். | இவைஅகவற்சீர் எனவும் பெயர் பெறும். |

343. உரிச்சீர் அல்லது மூவசைச்சீர் என்பது, மேற்சொல்லப்பட்ட நான்கில் ஈற்றிலே நேரசையும் நிரையசையும் தனித்தனி கூடி வருவதாகிய எட்டுச்சீர்களும் ஆம்.

(உ-ம்.)

| | |
|---|---|
| நேர் நேர் நேர் = தே மாங் காய்<br>நிரை நேர் நேர் = புளி மாங் காய்<br>நிரை நிரை நேர் = கரு விளங் காய்<br>நேர் நிரை நேர் = கூ விளங் காய் | காய்ச்சீர் (சு-ம்) வெண்பாவிற் குரியன இவைவெண்சீரெனவும்படும். |
| நேர் நேர் நிரை = தே மாங் கனி<br>நிரை நேர் நிரை = புளி மாங் கனி<br>நிரை நிரை நிரை = கரு விளங்கனி<br>நேர் நிரை நிரை = கூ விளங் கனி | கனிச்சீர் (சு-ம்) வஞ்சிப் பாவிற்கு உரியசீர் எனவும் படும். |

344. பொதுச்சீர் அல்லது நாலசைச்சீர் என்பது மேற்சொல்லிய மூவசைச்சீர் எட்டின் ஈற்றிலும், நேரசையும் நிரையசையும் தனித்தனி அடுத்து வருதலால் ஆகிய சீர்பதினாறும் ஆம்.

இவற்றிற்கு உதாரணவாய்பாடு.

| | |
|---|---|
| தே மாந் தண் பூ | தே மாந் தண் ணிழல். |
| புளி மாந் தண் பூ | புளி மாந் தண் ணிழல். |
| கரு விளந் தண் பூ | கரு விளந் தண்ணிழல். |
| கூ விளந் தண் பூ | கூ விளந் தண் ணிழல். |
| தே மா நறும் பூ | தே மா நறு நிழல். |

புளி மா நறும் பூ   புளி மா நறு நிழல்.
கரு விள நறும் பூ   கரு விள நறு நிழல்.
கூ விள நறும் பூ   கூ விள நறு நிழல்.

இவை வெண்பாவினுள் வருவன வல்ல. கலியினுள்ளும் அகவலுள்ளும் பெரும்பாலும் குற்றிய லுகரம் வந்த விடத்தன்றி வாரா. வஞ்சிப்பாவினுள் பெரும்பாலும் வரவும்; ஓரடியில் இரண்டு நாலசைச்சீர் கண்ணுற்று நிற்கவும் பெறும்.

345. தளையென்பது நின்றசீரின் முதலசையோடு வருஞ்சீரின் முதலசை ஒன்றியேனும் ஒன்றாதேனும் தொடர்ந்து நிற்பது.

(1.) நேர்முன் நேரும், நிரைமுன் நிரையும் வருதல் ஒன்றி வருதலாம்;

(2.) நேர்முன் நிரையும், நிரைமுன் நேரும், வருதல் ஒன்றாது வருதலாம்.

346. அது நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, வெண்சீர் வெண்டளை, இயற்சீர் வெண்டளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றா வஞ்சித்தளை, கலித்தளை என ஏழாம்.

347. ஆசிரியத்தளையாவது நேரோடு நேரும் நிரையோடு நிரையும் ஒன்றுவது ஆம்.

(உ-ம்) திருமலை தலைஇய
இருணிற விசும்பின்
விண்ணதிர் இமிழிசை கடுப்ப
பண்ணமைத் தவர்தேர் சென்ற வாறே.

இதில், கருவிளம்-கருவிளம்,
கருவிளம்-புளிமா
கூவிளம்-கருவிளம்-புளிமா,
கூவிளம்-புளிமா-தேமா-தேமா;
என நேர்முன் நேரும், நிரை முன் நிரையும் வந்தமை காண்க.

348. வெண்டளை என்பது மாமுன் நிரையும், விளமுன் நேரும் காய்முன் நேரும் வருவது ஆம்.

(உ-ம்.) உருவு கண்டெள்ளாமை வேண்டுமுருள்
பெருந்தேர்க் கச்சாணியன்னா ருடைத்து.

இதில், கருவிளம்-தேமாங்காய்-தேமா-கருவிளங்காய்-தேமாங்காய் - தேமா - பிறப்பு, என வந்தமை காண்க.

349, அடி என்பது தளையினாலே இணைக்கப்பட்ட சீரோடு வருவதாம்.

350. அது இருசீரால் வருவது குறளடி எனவும், மூன்றுசீரால் வருவது சிந்தடி எனவும், நாற்சீரால் வரு

வது அளவடி எனவும், ஐந்துசீரால் வருவது நெடிலடி எனவும், மிக்கசீரால் வருவது கழிநெடிலடி எனவும் ஐந்துவகை ஆம்.

351. தொடையாவது அடிகளிலும், சீர்களிலும் எழுத்துக்கள் இசையத் தொடுப்பது ஆம்.

அது, எதுகைத் தொடையும் மோனைத்தொடையும் என இருவகையாம்.

352. எதுகைத் தொடையாவது அடிகளில், முதலெழுத்துக்கள் மாத்திரம் அளவில் ஒத்து நிற்க இரண்டாம் எழுத்து இசையத் தொடுப்பது ஆம்.

(உ-ம்.) மலர்மிசையேகினான் மாணடிசேர்ந்தார் நிலமிசை நீடுவாழ்வார்.

இதில், மல என்பதற்கு நில என்பது, எதுகையாம்; கட்டென்பதற்குப் பட்டென்பது எதுகையாம் பாட்டென்பது எதுகையாகாது.

353. மோனைத் தொடையாவது முதற் சீரின் முதலெழுத்தோடு பின்வரும் சீர்களில் ஒன்றினுள் ஆயினும், பலவற்றினுள் ஆயினும் முதலெழுத்து ஒன்றி வருவது.

| | |
|---|---|
| அ, ஆ, ஐ, ஔ,<br>இ, ஈ, எ, ஏ,<br>உ, ஊ, ஒ, ஓ,<br>ச, த,<br>ஞ, ந,<br>ம, வ, | ஒன்றுக்கொன்று மோனையாம் |

(உ-ம்.) மேற்கண்ட குறளில் மகரமும், நகரமும், மோனையாக வந்தன.

354. பாவென்பது, இரண்டு முதலிய அடிகளால் ஆக்கப்பட்டு வெண்பா முதலிய பெயர் பெற்று வருவது ஆம்.

355. அது வெண்பா, அகவற்பா, கட்டளைக்கலித்துறை, விருத்தம் எனப் பலவகைப்படும்.

356. அவற்றுள் வெண்பா ஈற்றடி முச்சீரடியாகவும், ஏனைய அடி நாற்சீரடி ஆகவும் பெற்றுக், காய்ச்சீரும் அகவற்சீரும் வெண்சீர் வெண்டளையும், இயற்சீர் வெண்டளையும் கொண்டு, மற்றச்சீருந் தளையும்பெறாது, காசு, பிறப்பு, நாள், மலர், என்னும் வாய்ப்பாட்டால் முடிவது ஆம்.

357. அது குறள்வெண்பா, சவலைவெண்பா, நேரிசைவெண்பா, இன்னிசைவெண்பா என நான்கு வகைப்படும்.

(1.) இவற்றுள் குறள்வெண்பா நாற்சீர், முச்சீர் என இரண்டடியாய் வருவது.

(உ-ம்.)

கண்ணுடைய ரென்பர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

(2.) சவலைவெண்பா இரண்டுகுறள் தனிநிலையின்றி வருவது.

(உ-ம்.)

அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவல்ல
நட்டாலு நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலுமேன்மக்கண் மேன்மக்களேசங்கு
சுட்டாலும் வெண்மைதரும்.

(3.) நேரிசைவெண்பா நான்கடியாய் இரண்டாம் அடி இறுதிச்சீர் தனிச்சொல்லாய் வருவது.

(உ-ம்.)

தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மையிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று
பரிவதூஉஞ்சான்றோர் கடன்.

(4.) இன்னிசைவெண்பா நான்கடியாய்த் தனிச்சொல் இன்றி வருவது.

(உ-ம்.)

இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது
பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி
ஒருவுமின் றீயவை யொல்லும் வகையான்
மருவுமின் மாண்டா றறம்.

259. கலிப்பா நாற்சீரால் வரும் அளவடியாய், இயற்சீர் பயின்று, அயற்சீர் விரவி, தன்தளை தழுவி, பிறதளை மயங்கி, கருவிளங்கனி, கூவிளங்கனியென்னும் இரண்டு நெருங்கலவாது மூன்றுமுதலிய பலவடிகளால் வருவது.

(உ-ம்.)

நீரிடை நுரையி னேர்செறு மிளமையே
காரிடை மின்னிற் கடுந்திறம் புகழே
தேரிடை யுருளிற் செல்வ மாறுமே
தாரிடை மதுவினிற் றவிர்ந்தொழி யின்பமே.

359. ஈற்றடியின் இறுதிச்சீரின் ஈற்றிலே ஏகாரம் பெரும்பாலும் வரும்.

360. அகவல், ஆசிரியம், ஒருபொருட் சொற்கள்.

361. கட்டளைக் கலித்துறை யாவது இறுதிச்சீர் கூவிளங்காயாய் ஆவது, கருவிளங்காயாய் ஆவது வருவது.

ஓரடிக்கு எழுத்து முதலசை நேர் ஆயின் ஒற்றொழித்துப் பதினாறும், நிரையாயின் பதினேழும் ஆம்.

(உ-ம்.) ஆய் முத்தப் பந்தரின் மெல்லிணை மீதன்
னரு கிருந்த,
நீமுத்தந் தாவென் றவர்கொஞ்சும் வேளையி னித்த நி
த்தம்,

வேய்முத்த ரோடென் குறைகளெல்லா மெல்ல மெ
ல்லச் சொன்னால்,
வாய் முத்தஞ் சிந்தி விடுமோ செல்வேலி வடிவம்
மையே.
எரியெனக் கென்னும் புழுவோ வெனக்கென்னு மிந்த
மண்ணும்,
சரியெனக் கென்னும் பருந்தோ வெனக்கென்னுந் தா
ன்புசிக்க,
நரியெனக் கென்னும்புன் னாயெனக் கென்னுமிந்
நாறுடலைப்,
பிரியமுடன் வளர்த்தே னிதனாலென்ன பேறெ
னக்கே.

362. விருத்தமாவது எல்லாச்சீராலும், எல்லா அடி
களாலும் வருவது.

363. தனியின்றி நடக்கும் ஆயினும் அதற்குரிய பொது விதியாவது; ஓரடியில் தேமா வந்த விடத்து மற்றோரடியில் தேமா ஆயினும் புளிமா ஆயினும் வரும். விளம் வந்த விடத்து மற்றோரடியில் கூவிளம் ஆயினும் கருவிளம் ஆயினும் வரும். காய் ஈற்றுச்சீருக்குக் காய் ஈற்றுச்சீரும், கனி ஈற்றுச்சீருக்குக் கனி

ஈற்றுச்சீரும் வரும் மற்றவைகளும் இவ்வாறே.

364. சீர் தம்முள் மாறிவரில் சந்தபேதமாம்.

(உ-ம்.) கடுமனவன் பேய்கனலிற் கொடிதாகு மலை
களிறுங் கடத்தற்கொண்ணு
நெடுவயிரத் திறம்வலிது கடல்பருகி மேருவினை நே
ரேர்பார்த்துச்
கடுகனலே விழுங்குகின்ற திறத்தரிது புலன் முழுதுந்
தோன்று மூலம்
கெடுமூலத் தண்டெளிதுண்டில தாகிலிலதிதனைக் கெ
டுத்தல்வேண்டும்.

யாப்பியல்-முற்றிற்று.

---